வேறு.

பூதலமுழுவதும்பொலிந்தவாகினி
மீதலமுழுவதுமிடைந்தபூழிக
ளாதலிற்றமியனேனாற்றுமாறெவன்
சாதலேபொருளெனவிளம்பற்றக்கதே. (௪௭)

உலம்பொருதோளிவில்லுண்டைபோக்கி மா
நிலந்திரிசிறியனேனிகரிலங்கர்கோன்
வலந்தருவீடுமன்மறைவலாரியன்
கலந்தபோர்முனையமர்க்கருதல்போதுமோ. (௪௮)

கோடிதேர்கிம்புரிக்கோட்டுவாரண
நீடியவயங்கள்போர்நிருதராதியாத்
தேடிவான்றுணையொடுசேர்ந்தவேந்தெதிர்
பேடிநீதுணையெனப்பெயர்வதோசொலாய். (௪௯)

தன்வலிபிறவலிதகுதிதேர்ந்திலா
மன்வலியென்வலிமாண்பின்பாலதோ
புன்வலியேனரும்போரின்முந்துற
லென்வலிவேண்டிலாவிசயனேகொல்யான். (௫௦)

கூடலுந்தும்பையான்மீட்டுத்தொல்புகழ்
கோடலுமெம்பெருங்குரவர்க்கேற்பதே
யாடலஞ்சிலைநிலைபயிலுமாற்றலே
னீடலர்பொருமுனைக்கெய்திலீனமே. (௫௧)

கழியினுநிரைக்கணங்கமழுமச்சநா
டழியினும்பழியெனையடுத்ததென்னினு
மொழியவோர்செயலிலைமுந்துதேரையூர்
வழியுறநடத்தெனவருந்திக்கூறினான். (௫௨)

தேர்மிசையிருந்தவச்சிறுவன்றன்மொழி
கார்மிசைவருபவன்காளைகேட்டுழி
போர்மிசைச்செல்கிலன்புறந்தந்தோடிமீண்
டூர்மிசையணைபவனென்றுன்னியே. (௫௩)

மீளவுங்கூறுவான்வேந்தன்மைந்தனே
யாளநீயுலகெலாமாக்கிவந்தவர்
மாளவோரம்பினால்வாட்டிமீள்குது
மீளிநீவெருவலைவிளம்பக்கேண்மினோ. (௫௪)

சேட்செலும்பெரும்புகழ்தேய்த்துதந்தைதன்
மாட்சிமைகுறையநீமடங்கல்போதுமோ
வாட்செலத்தேர்செலமன்னர்வாண்முகந்
தூட்செலத்துரந்துபோர்தொடங்கலாண்மையே. (௫௫)

அன்னையுந்தங்கையுமடுத்தமாதரு
மொன்னலர்கொளுநிரையுதவவல்லையென்
றின்னிலமகிழ்ந்தவணிருந்துளாரவர்க்
கென்னைநீமீண்டுபோயியம்பும்வாய்மையோ. (ருசு)

பேடியானென்னினும்பெயர்ந்துதேர்விடக்
கூடியமுகந்தொறுங்குழுக்கொண்டெய்தினோர்
வாடியகண்டதுண்டன்றிமாற்றலர்க்
கோடியபோர்முனையுணர்ந்திலேனரோ. (ருஎ)

முறுக்கவிழ்நான்மலர்மாலைமொய்ம்பினோர்
மறுக்குறத்தேர்விடும்வல்லபத்தினால்
வெறுக்கையின்மானிரைமீட்டுமேவுது
மொறுக்கினின்னுயிர்க்கெனதுயிரையீவனால். (ருஅ)

எண்ணலரெந்தனைப்பெருகியெய்தினு
மண்ணனீமனந்துணிந்தமரினெய்தினால்
விண்ணவராசியும்விந்தைநோக்கமு
மண்ணுயர்புகழுநின்மருங்கினெய்துமே. (ருகூ)

குருகுலநாயகன்குறித்தபோர்முனைக்
கருகுநீவிற்றெறிந்தனுகுமுன்னரிற்
சருகுமாருதத்தினாற்சாய்ந்தபோர்படுத்
தொருகணமதனுமுன்னூரிலுய்ப்பனால். (சு0)

வேறு.

வருந்தமுனக்கெனஞ்சன்மனவலிகொண்டடைதிவிரைந்தென்னக்
கருத்தினுயர்ந்தபெரும்பேடிகரைப்பவிருப்பங்காணுமற்
செருந்தன்மேதிபொழிதீம்பாற்சென்னல்வளர்க்குந்திருநாட்டுக்
கொருத்தனெனும்வில்விராடன்மகனுரைத்தானிதனையுயிர்ப்போங்க. (சுக)

சொன்னுலுணராய்நின்னுளத்திற்றுணிந்துதெளியாய்சூழ்ந்தபடை
யென்னுற்றாந்துவிறலெயதற்கிருந்தாயானன்றெனையீன்ற
மன்னற்கிலவன்முன்னோன்மாற்றுந்தரமோமதியிலிநீ
துன்னார்க்குறுதிதனக்குறுதிதொடங்கல்விலங்கறுனிவாயோ. (சுஉ)

பைவந்தொளிருமணியுரகப்பதாகைக்கதிபனுடன்சரத
மெய்வந்தவிருநெடுங்கிரணவிறல்வேற்குரவர்பொருமுனைவாய்
கைவந்தவரும்புகவறியார்காலன்வெருவுங்கணக்கென்னி
லெய்வந்துணரயான்றனிசென்றியற்றுஞ்செருவேதியம்பாயே. (சுஙு)

தூரம்புடைசென்றவர்தொடுத்ததொடையாற்றனித்தேர்த்தொலைப்புண்டு
வாரம்பெறமெய்ந்நடுநடுங்கமடங்கிக்கால்கள்சிவப்பேறி
யூரம்புனைவீதியிற்சேறல்புகழோவுருந்தேருடனும்
வீரம்பெறார்போலுயிருடனும்மீண்டால்வசையோவிளம்பாயே. (சுச)

என்னப்பலவுமெடுத்தியம்பியிருகண்களுழவுளநடுங்க
மன்னர்க்குதித்தவுத்தரனுமைந்தனுயிர்த்துமலர்க்கரஞ்சேர்
கன்னற்சிலையுங்கடுங்கணையுங்கடிதேயுகுத்துப்புவிமிசைபாய்ந்
துன்னர்க்கரியான்றனிநகரந்துறுவான்விரைவாலோடினனால். (சுரு)

முற்றுவாண்மையுறவிட்டோமுனைக்கேடழிந்தோடுதெறிரியா
வற்றுக்கருணைக்கொருமுதலாமகவானளித்ததிருமைந்தன்
பற்றார்தமைவெல்வதுகருதிப்பரிவாய்ப்புனையப்படுங்கயிறு
பொற்றேரதனுட்செலமடுத்துப்புவிபாய்ந்தவனைத்தொடர்ந்தானே. (சுசு)

துங்கத்திரடோள்வயமீளிந்தொடர்ந்துதானைத்தூரந்திடுபோ
தங்குற்றிலகும்வலம்புரிந்தாரரசன்படைஞரார்கலியிற்
பொங்கித்தம்மிற்காம்புடைத்துநக்கார்புலப்பாடுணராதார்
செங்கட்குரவர்முதலானோர்சிலரிங்கிதனைத்தெளிந்துரைத்தார். (சுஎ)

நீண்டவிழியுந்தாழ்கரமும்நிகரில்சயிலத்திருமார்பு
மாண்டகமலநிகர்முகமுமகவான்மகனிற்பொலிந்துளவாற்
பூண்டபணியுஞ்செறித்ததுகிற்பொலிவுங்குழலும்பொன்னனையார்
வேண்டுந்தரத்தால்விளங்குதலாலென்னேதெரிந்துவிளம்புவதே. (சுஅ)

தொடுத்ததாள்வெண்கவிகைத்துலங்குவிராடன்மானகரின்
றடுத்ததொருதேரார்கருதியடைந்தோன்விடலையவ்விரதம்
விடுத்தோனுண்பெண்ணனவையம்விளங்காநின்றுனிவர்வாயை
யெடுத்தாருரைப்போரெனக்கலங்கித்தெளிவாலிதைமீண்டியம்புவரால். ()

திகத்தர்பெருமான்றெக்கணத்திற்சேர்ந்தானிரைகொள்வதற்கென்றே
நகத்தையனையதிரடோளான்காதித்தனிகமுழுதெய்தச்
செகத்திற்புகழுநிரைக்கணமுஞ்செங்கைவயமாம்படிசென்று
னகத்தினிருந்தவிளங்காளையணியுந்தரனேயிவனாமால். (எ0)

பாண்டுசிறுவரைவருமிப்பதியினிருந்தாங்கமர்க்கேகு
மாண்டேமகிபனொடுநால்வர்சென்றார்மறைந்தவுருவோடு
மீண்டுமகவோடுவெளவியம்புவுருவோடிறைமகன்றேர்த்
தூண்டும்வலவன்மகபதிதன்சுதனுமிதுவேதுணிபாமால். (எக)

மன்னர்பெருமானிரைகோடல்வந்தேவொற்றர்மொழிந்திடலால்
கன்னல்மதனையனையவெழிற்காளைகடுங்கண்சிவப்பேறித்
தன்னையெதிரையுணராமற்சிறியோனுனதன்மையினூற்
பொன்னந்தனித்தேர்மிசைதமியாய்ப்புகுந்தானிதுவேதுணிபாமால். ()

தேவரிறைவன்றருகுமான்றெய்வமேனியொளிமறைத்துக்
கோவிலகத்துப்பேடியர்தங்குறிப்பாலிருந்துதினங்கழித்தான்
மாவலிரதம்விடுந்தொழிற்குமைந்தற்கொருவன்வாயாத
சோர்வையுணர்ந்தாங்கவனிரதந்தூண்டுவாரிற்றொடர்ந்தனனால். (எஉ)

வந்தகுமானகரைகாணுவருவாங்கினையைநாக்குதலுஞ்
சிந்தைதகலங்கிமுன்புரைத்தசெயலுமறந்துதியங்கியகண்
டுந்துவலவனவர்க்குறுதியுரைத்துத்தெருட்டவிரும்பாம
லந்தநெடுந்தேரினுங்குதித்தேயாவிக்குறுதிநினைந்தானல். (எச)

பீடுங்கொடியவரிச்சிலையும்பிறைவாய்க்கணையுநிலமுகுத்து
நீடுங்கொடிமாமதில்கள்புடைசூழநிகரில்நகர்முகமா
வோடுஞ்சிறுவன்றனைநோக்கியுருவிற்பேடிபோன்றிருந்தோன்
கூடுங்கருணைமுகத்தொடும்போய்க்குறுகிக்கொணர்வான்றொடர்ந்தனனால்.*

இதுவேயிவணின்றடுத்தபடியென்னக்குரவர்தமதறிவாற்
பொதுவேயுணர்ந்துபகர்ந்தளவிற்பொறியாடரவக்கொடிவேந்து
மதுவேயொழுகுந்தாரருமறுகிப்பசுமைமாத்தரணி
யதுவேயெனவிங்கிவர்மிசைநோக்கனரிவர்வாறறைகுதுமால். (எசு)

வேறு.

திணைத்துணையெனும்பொழுதுதீருமுனரோடி
முனைத்துணையிலானைநரன்முன்கைதொடவஞ்சி
யுனைத்துணைவிழைந்தவெனதுள்ளமுணரிற்றீ
வினைத்துணைவிழைந்தவரிலாமெனவெறுத்தே. (எஎ)

கண்கலுழிபொங்கவிருகானடுநடுங்க
வண்கமலமீதுபணிவண்டுளிகளென்ன
வொண்கிரணமாமுகமுலர்வெயர்வரும்ப
வெண்குலையவாய்குழறவோர்மொழியிசைத்தான். (எஅ)

பேடியிதுகேட்டியெனையின்றருள்பிராட்டி
வாடியெதிர்நோக்கியெயில்வாயில்வழிநின்று
ளோடியவடன்னுயிர்நலிந்தவரிலன்றோ
கோடியபெருஞ்சமர்குறித்தவர்களிப்பால். (எகூ)

இம்முறையெனைத்தனியெழிற்புரமுறுத்திற்
செம்மலருணின்மிசைசிறக்குமிதுவன்றிக்
கைம்மலைகடும்பரிகள்காணிரதமூரோன்
றெம்மையாதாரமுனமியானுதவவல்லேன். (அ0)

நட்புனைவிடாதுபலநாளுமுயிரொன்றாய்
பெட்புறவியந்துனதுபேரைநிலைசெய்வன்
கட்புலனடுக்குமுனர்காமர்நகரெய்தக்
கொட்புறவிடுப்பவருள்கூர்கெனவிசைத்தான். (அக)

கைத்திறல்படைத்தவர்கலக்குறுவலத்தோ
னுத்தரன்மொழிக்கினிதினுத்தரமுறைத்தா
னித்தினமுனக்கரியவாழ்தரவிருந்தேன்
சித்தமருள்விட்டென்மொழிதேறுகெனமீட்டும் (அஉ)

ஆடல்புரிவெஞ்சிலைவலாரிதுனையாக்கி
வாடநமதொன்னலரைவாட்டியெதிரேற்றோர்
வீடவமராடிநிரையோடுநகர்மீள்வன்
பேடியெனையாகநினையேலரசுபெற்றோய். (அங)

உன்வரவுகாணுமுனையீன்றவளுவப்ப
மன்வரவுகண்டுருகிமார்புறமுயங்கப்
பொன்வருநகர்ச்சனர்புகழ்ந்தின்றெதிர்கொள்ளக்
கொன்னிரைவில்வென்றுதருவன்குறைவில்கொற்றம். (அச)

பாழிவரைமத்திலைபட்டதெனவொன்னார்
பூழிபடவெற்றியமர்செய்தொழில்பொறுப்பன்
வாழிபடுமெச்சர்குலமன்னன்மதலாய்நீ
யாழிபடுதேர்விடுதியச்சமறவென்றான். (அரு)

இடுக்கணறவில்வலியியம்புமொழிகேளா
நடுக்கமுமுயிர்த்தனுநவைச்செயலும்விட்டே
மூடுக்கெரிநிகர்த்தருண்முயங்குவிழியானை
யடுக்குறவியந்திரதமூர்தொழிலமைந்தான். (அசு)

மன்னுதவுமைந்தன்வலவன்றொழிலியற்ற
வென்னுதவுவேட்கையறவில்விசயன்மீண்டே
பொன்னுதவுதேரின்மிசைவில்லொடுபுகுந்தான்
முன்னுதவுநல்வினைமுயங்கியநலத்தால். (அஎ)

உத்தரனியற்சிலையுமொண்கையினிருந்த
வத்திரமுமேந்தியருளாலவனைநோக்கி
மொய்த்தசினைவன்னியருகோட்டுதிமுனைத்தே
ரத்திசையினோர்கருமமாமெனவறைந்தான். (அஅ)

பேடியுரைதன்செவிபுகாமுனுயர்பெற்றி
நீடியபதாகைசெறிநேயமுளபொற்றே
ரோடியுறுவித்தனனுசாவறுவலத்தோ
னுடிவருதுன்னலருணர்ந்திதைநவின்றார். (அகூ)

கோடியிரதங்கண்மிசையோர்சிலைகுனித்தே
நாடிவருமாண்மைநரனல்லருளர்கொல்லோ
பேடியெனவுன்னுவதுபேதைமையினீரென்
றோடிமுனைகெட்டுணர்வொடுங்கினர்கலங்கி. (கூ0)

அங்கவர்கலக்கமுமடுத்ததுநிமித்த
மெங்கணுமெழுந்துளவியற்கையுமுணர்ந்தே
யிங்கிதுபகர்த்தனனெடுத்தசிலையாசான்
வெங்கொலையாவுறுவிலோதனனைநோக்கி. (கூக)

அம்பரமதிர்ந்தனவருந்திசைகடோறுங்
கம்பிதமிகுந்தனகழிந்தபகல்விண்மீன்
செம்புனல்சொரிந்தபுயறேறலுமிழ்மாலை
வெம்பியபுலால்வெறிமிகுந்ததெவர்மாட்டும். (௯௨)

காய்கரிமிகுந்திறன்மறந்தனகளிப்பிற்
பாய்பரியருந்துளிபடுங்கண்வழிதோறும்
பேய்கொடியிடைந்துபலபேரொலியெழுந்த
வாய்கதுவுமேதிமுனைவான்புகைமலிந்த. (௯௩)

பற்பலவிதம்படுகொடுஞ்செயல்கள்பார்மே
லற்புதமெனும்படியருந்துயர்விளைக்குஞ்
சொற்பழுதெனுமுறைதுணிந்திறுதியென்றே
முற்படமொழிந்தபிறகுக்கிதுமொழிந்தான். (௯௪)

வேறு.

மருவாரெதிரொருதேசொடுவருமாறுதெரிந்தி
ரொருவாளியில்விறலெய்துரனுடையானலன்வருமோ
பொருவாரெவரெமையென்றுடல்புளகிப்பதுபொருளோ
வெருவாதவர்வரவாகினியணிசெய்துறல்விதியே (௯௫)

மெய்க்கொண்டுறுமுயிரீகினும்வளனீகினுமெலிவோ
கைக்கொண்டுறுநிரையீதல்கருத்துள்ளவர்கடனோ
மைக்கொண்டணிகர்க்குஞ்சிலைவல்லீர்நிலைசெய்மின்
றிக்காடிரிகத்தன்சமர்வியவாததிறத்தீர். (௯௬)

எனமன்னவர்பலரோடுமிசைத்தொண்கரிபரிதேர்
மனநேர்படையினரோடணிவகுவித்தவரிடையிற்
புனிதாவினநிரைவீறொடுபுகுவித்தனனந்தோ
வினியாரிதுகவர்வோரெனமுடிவேந்தரிசைத்தார். (௯௭)

அக்காலையில்வருவோனரிமகனுமெனவாசான்
முக்காலமுமுணர்கேண்மையினுளங்கொண்டிதுமொழிவான்
றக்கோனெனவிமையோர்புகழ்சாதந்தருவிரத
மிக்கான்முகமலர்தன்மலர்விழியாற்குறிபடவே. (௯௮)

தாளாண்மைகுறித்தேயொருதமியெய்தினனந்தோ
வாளாண்மைவலத்தோன்குருகுலவானினிமதியான்
வேளாண்மைதனைப்போலிதுவிரகோவிறல்பெறவே
நாளாண்மையெவர்க்கோவுணர்கிலனென்றுநவின்றான். (௯௯)

வருவோன்மிசையளிகொண்டவர்மறைவாயுறுசெயல்விட்
டொருவாமுனிவொடுமெய்தினர்கொல்லோவெனவுன்னுத்
திருமாமுனியினிமேற்செயல்சிந்தித்தனனன்றே
பெருமானொடுபகர்வோனெனமறுவாய்மைபிறித்தான். (௧00)

வாராய்குருகுலநாயகமணியேமருவலரைப்
போராலடுதினமாமிதுபொறைசெய்தினமுழுது
நேராலகன்றுளதென்றுநிரைப்பச்சதுர்மறையோ
னாராவமுதுண்டோரின்மகிழ்ந்தொன்றையறைந்தான். (௧௦௧)

அரியொன்றளவறுநாண்முழையதனுடபசிவருந்திக்
கரியொன்றியதிரண்மேலெழுகவிழ்த்துளதன்றோ
வரிதங்கியசிலையோடிவண்வருவாகினிமிசையிப்
பரிவாவுறுதேரோன்வருபரிசென்றுபகர்ந்தான். (௧௦௨)

பின்னுமிதுப்கர்வானுயர்பிறைசூடியந்தே
தன்னெண்கணைதரவேந்தியதாடாளனையெவரே
துன்னுஞ்சிலைதனில்வெல்பவர்சுடர்வந்தெழினுண்டோ
மின்னுஞ்செயணிகாற்றுளமிடன்மின்மினிக்கென்றான். (௧௦௩)

ஆசானுரைசெவியெய்துமுனல்கான்றிருவிழிவாய்த்
தேசானுயர்கதிர்முன்றருகிறுவன்சினமுடுகி
மாசாவதுபகராவிறன்மறையோன்முகநோக்கிப்
பேசாமணிமுடிவேந்தர்கள்பெரிதஞ்சமொழிந்தான். (௧௦௪)

பன்னாகமுயர்த்தோனுனையிறைமாண்புபடுத்தி
யுன்னால்விறல்பெறநின்றனனுனதுள்ளமுணர்ந்தாற்
றுன்னாரிசைதுதிசெய்தவர்தோளாண்மைவியந்தே
மன்னாண்மைபழிப்பேறமதிக்கொண்டனைபோலாம். (௧௦௫)

சொல்வண்மையரடலைவர்நினக்கன்புதொடுத்தால்
வில்வண்மைவியந்தென்பொருளிதுமேன்மையினாமோ
வெல்வண்மையவர்க்குண்டெனினமர்வாயெவர்வியவார்
கல்வண்மைபொருந்திக்கடிகமழுந்திணிதோளாய். (௧௦௬)

அரிதந்தவன்விறல்கொண்டனுகினனென்னிலர்டத்தோர்
வரிவெஞ்சிலைதனிலங்கவன்வானாளவிடுப்ப
னெரிவெங்கனலிடையோர்சருகெய்தித்திறல்கொளுமேற்
பரிதங்குபொலந்தேர்மிசைபடர்வோனிசைபெறுமே. (௧௦௭)

என்றானதுமகிநாயகநிருபன்செவிபுகலு
மின்றேனிதுவழுவொதினையிவனேநானுமேற்
சென்றாரவர்வனமூடுதிரும்பப்பலசுரர்நா
ளின்றேலுயிரிழந்தாரெனவறைகென்றுபணித்தான். (௧௦௮)

தேமன்னுநறுந்தார்புனைதிண்டோளானுடைய
மாமன்னவர்பெருமானிதைமொழிசெய்திடவனசப்
பூமன்னுபுயத்தோனொடுமுளமேலவர்புகலா
ரோமென்றுடனுற்றார்நிகழ்செயல்காண்குவதுன்னி. (௧௦௯)

வேறு.

ஆறிலாதவூருமூரிலறனிலாதமனைகளுந்
தேறிலாததவமுமாண்மைசேர்விலாதவேந்தனு
மூறிலாதவீரன்மெய்யையொக்குமென்றுதேற்றியே
மாறிலாதபேடிவன்னிமரனைவந்துகுறுகினான். (கக0)

ஏன்றுவலவனுயகுமரன்றனுடுபுகலுவான்
பெறுகவந்துகவையினெய்துபெற்றியையவர்பற்றுறுந்
தறுகணாயுதங்களீபுகுந்துகண்டுசார்ந்துளோர்
மறுகவங்கொர்சிலையெடுத்துவருதியென்னுமொழிகளே. (ககக)

அந்தமைந்தனதனைநோக்கியாவிநீத்ததோற்காத்
தெந்தவண்ணமேகலத்தலென்னையேவலீதெனச்
சிந்தையன்புபலமொழிந்துசிறுவனைத்தெருட்டியே
சந்தனத்திருந்துயர்ந்ததருவின்மீதுபோக்கினான். (ககஉ)

அச்சமற்றடைந்துமைந்தனைவர்வெம்படைக்கலம்
நிச்சயித்திலுன்னிநெஞ்சினையமோடுசார்தனு
முச்சிதத்தியங்குபாந்தளுருவினிற்றுரந்ததான்
மச்சருக்கொருத்தனீன்றமகவினெஞ்சுமாழ்கவே. (ககங)

உத்தரன்றியங்கல்கண்டவும்பர்நாதன்மைந்தனுங்
கைத்தலம்பணித்துளக்கலக்கமங்ககற்றலாற்
புத்தியிற்றெளிந்துமீண்டுபுக்குவெம்படைக்கலங்
கொத்துறக்கலைத்துணர்ந்துசிந்தைகொண்டுகூறுவன். (ககச)

வரைவிளங்குபாந்தளொன்றுபடைகளோடுமருவலாற்
கரைவிளங்கலாதுசிந்தைகங்குன்மூடிநின்றதால்
விரைவிளங்குதாரரேதிவிதமும்வெய்யமாசுணந்
திரைவிளங்கவந்தவாறுமுறைசெய்கென்றுசெப்பினான். (ககரு)

மைந்தனேதுவாய்மையாங்குமறுவில்பேடிகேட்டுழி
சிந்தையாங்குவந்துதேரின்மீதிருந்துகூறினு
னிந்தவெம்படைக்கலங்களிவரெடுப்பதென்முறை
முந்துரைத்தமாசுணத்தைமூரிவில்லென்றோதினான். (ககசு)

பிரமன்முந்திலக்கமாண்டுபின்னரிற்பிரசாபதி
வரியவாயிரங்காணன்குமாறுகாதிரும்புமாண்
டுரியபோகிபத்துநூறுடுக்கணுதனைந்துநூ
றரியவாண்டுவருணனூடுமைம்பதிற்றிரட்டியே. (ககஎ)

இந்தவிற்றரித்துளாரிதற்பினுயிருந்தழற்
சுந்தரத்திலாசைகொண்டுவருணனல்கு துணிவினு
லுந்துறத்தரித்துளானுரைக்குநற்றனஞ்சயன்
சிந்தைவெற்றிகண்டளித்தசிலையிதென்றுகருதுவாய். (ககஅ)

விசையனுறுபத்தோடைந்துவிறல்கொளாண்டிவ்வில்லினுற்
றிசைகள்வென்றுவாகைசூடுமென்றுதேவர்செப்பினு
ரசைவிலாதகாண்டிவப்பேரறையநின்றதிதுவரோ
விசையெலாமிருந்தபாந்தளெனவிளங்குமுருவமே. (கககூ)

மண்ணில்விண்ணிலிந்தவில்லைமானவல்லவில்லிலை
எண்ணிலிந்திரநீலமீட்டிழைத்ததென்னவொளிருமால்
வண்ணவைந்துபூதபேதமனிதர்தேவராசுரரா
லண்ணறந்தமைந்தகேட்டியழிவிலாததிதுவரோ. (கஉ0)

சொற்கநாடுமெகிழவென்றதோற்றமுந்தொடர்ந்தது
நிற்கவுத்தரத்திசைக்கணீடுவெற்றிகொண்டது
முற்கையென்னயாழ்வலோரையோட்டிமீட்டதன்மையும்
பற்குணர்க்கிவ்வில்லின்வல்லபத்திலன்றியில்லையால். (கஉக)

மற்றுமுன்னர்கடன்மதித்தமத்தையொத்தவான்கதை
குற்றமற்றவீமனெண்கைகொள்வதென்றுகருதுவாய்
சுற்றுமுள்ளதேனையோர்கள்படைகளென்றுசொல்லவுங்
கொற்றவன்செய்தெளிவிறந்துபின்னுமீதுகூறுவான். (கஉஉ)

குந்திமைந்தர்கைக்கொளேதிருறிசெய்வன்னியிடைவிடுத்
தெந்தனுடிருந்துளாரெடுத்துரைத்திநீயென
மந்தகாசவதனனுகிமைந்தனேடுகூறினன்
கந்தமாமலற்பொலிந்தகாட்சியொத்தகண்ணினன். (கஉ௩)

வேறு.

ஆண்டுபன்னிரண்டடவிதுன்னவு
மீண்டுநந்தம்முருவெளிப்படாவகை
யீண்டுநாட்டிலாறிருதகற்றவும்
பாண்டுதந்தவருடன்பட்டேகினர். (கஉச)

அனையதன்மையாலடவிவைகியே
வினைசெய்நாட்டிலோர்வருடம்வீட்டுவா
னினையதேயம்வந்தெய்தியேதியிப்
புனைகொள்வான்றருப்பொதியினுய்த்தபின். (கஉரு)

தங்கடொல்லுருவேறதாக்கியே
சங்கையாவருஞ்சாற்றலாற்றலா
தெங்குளார்கொலோவென்றுகூறினன்
றிங்கடொல்குலஞ்சிறக்கத்தோற்றினன். (கஉசு)

மறுவிலாதசொற்கேட்டுமெச்சர்கோன்
சிறுவனுங்குயிர்த்தொன்றுசெப்பினன்
குறுகலார்தருங்கொடுமையாலிவர்
பெறுவதோதுயருண்மைபேர்கலார். (கஉஎ)

கைதவத்தினாற்றொல்லைகாட்டியே
யுய்திறத்தைவிட்டுலருவவ்வினோர்
செய்திறத்தினாற்றேம்பிவாடவோ
மெய்தவத்தையேவியக்குஞாலமே. (௧௨௮)

அறனிருந்தசொல்லறனின்மைந்தனு
மறனிருந்ததோள்வலிகொள்வீமனுந்
திறனிருந்தவிற்செங்கைநீங்கலா
விறலிருந்தபோர்விசயநாமனும். (௧௨௯)

இருவராகுமற்றிளையமைந்தரு
மருவுறுங்குழன்மடந்தையோடுபோய்ப்
பருவரற்சிறந்திருந்தல்பண்பிதே
பெருமிதத்தினாணிகரில்பெற்றியோர். (௧௩0)

வேள்வியாற்றலும்வெறுக்கைநீடலும்
வாழ்வினூற்றமும்வலியுமாற்றியே
தாழ்வுமேற்படச்சலித்திருந்தலோ
ஊழ்வினைப்பயனெனவுரைத்தனன். (௧௩௧)

உருகிநெஞ்சொடுமுயிர்ப்புநீட்டியே
யிருகணீர்தரயாண்டையார்கோலோ
முருகுலாவுதார்மொய்ம்பரென்னவாங்
கருகிருந்தகோவலனுக்கோதுவான். (௧௩௨)

கேட்டியையநீகெடில்சிந்தையோர்
மாட்டினீமனம்வருந்தனின்னுடை
நாட்டினின்றணிநகரினும்படை
வீட்டில்வைகினர்விரிப்பன்கேண்மினோ. (௧௩௩)

வேறு.

வரிசைக்கிவனேயெனவான்முறையா
லரசற்கருகாதனமீதமர்வோ
னிரசித்தசொற்கங்கனெனும்பெயரோன்
முரசக்கொடியோனெனமுன்னுவையால். (௧௩௪)

முடையிற்சுவையுண்டிமுதன்மைபட
மடையிற்செய்பலாயனவண்பெயரோன்
கடையிற்கனலிற்பொலிகண்ணுடைவெம்
படைஞர்க்கரிவீமனெனப்பகர்வார். (௧௩௫)

மாவுக்கொருவன்னகுலப்பெயரோன்
கோவுக்கொருவன்றிறல்கொண்டசகா
தேவப்பெயரோனொருசேயிழையே
பூவிற்கொடியிற்பொலிவண்ணமகள். (௧௩௬)

யானேநாணுமிவையின்புறுநின்
வானோர்தருசிந்தைமயக்கறவே
கோனோர்தருவோயிதுகூறினனூ
னூனோடுயிர்போனுமேயுன்னுதலால். (௧௫௭)

இழிசெய்வினைகண்டபின்யாழினர்மேற்
பழிசெய்தனநல்கியபைங்கிளிசொல்
வழிசெய்துயர்கீசகன்மாய்வினுயி
ரழிசெய்தவன்வாயுவளித்தவனே. (௧௫௮)

கொடையிற்பொலிகொற்றவர்கோவுணரி
னிடையிற்றவசெய்துமதெய்தியதென்
மிடையிற்புறவம்புகவேண்டுகையாற்
றடையிற்படுபோந்தளிற்றூழ்ந்தனமால். (௧௫௯)

மாயக்கொடுவஞ்சகன்மன்னரெதிர்
நேயத்தொடுசொற்றநெடுந்தவனை
போயிற்றதுநென்னலொடும்புகழா
ராயிற்றவரொன்றிலையாமினிமேல். (௧௬௦)

என்றேபலவாய்மையியம்புதல்கேட்
டன்றேமகிழ்மெய்தியுமற்புதமீ
தின்றேயுணர்வேமெனவேந்தன்மக
னென்றேதுணிபோதினனோகையொடும். (௧௬௧)

அரனாருள்பெற்றெழிலாண்மைபெறு
நரனாமெனநின்னைநயந்துணரொன்
றிரனலவனுமமுஞ்சீர்கொள்பெயர்
வரலாறுமுரைக்கின்மயக்கறுமே. (௧௬௨)

என்னத்திறலுத்தரனின்சொலொடும்
பன்னப்புளகித்துளபண்பதனான்
முன்னைப்பெயர்வந்தமுறைப்படியே
தன்னைத்தெளியும்படிசாற்றினனே. (௧௬௩)

வேறு.

பங்குனன்கிரீடிபார்த்தன்றனஞ்சயன்விசயன்பார்மேற்
றங்கறுஞ்சுவேதவாகன்வீபற்சுசவ்வியசாசி
துங்ககிட்டினனேவெற்றியருச்சுனனென்றுதூயோ
ரெங்கணுமெடுத்துரைப்பதீரைந்துநாமமாமே. (௧௬௪)

உத்திரமென்னுநாளினுதித்தலாற்பற்குனப்பேர்
வைத்தனர்மகவான்றந்தமாமணிமகுடந்தாங்கி
யெத்திசைபுகுந்தபோதுமிரவிமீதெழுந்ததேய்க்கு
மத்திறலதனாற்கிரீடியாக்கினரகிலத்துள்ளோர். (௧௬௫)

பிரதைபென்றென்னையீன்றபிராட்டிபேருள்ளவாற்றாற்
சாதமார்பார்த்தனென்றேசாற்றுவார்தருமனைப்போ
லுரைபிசகாதவாற்றாலுதிட்டிரனிளவலென்றே
வருமுறைவைத்தநாமந்தனஞ்சயனுருமன்னோ. (கசசு

பயிற்றியபடையால்வாகுவலியினாற்பாரிலென்னைச்
செயித்தவரிலாதபண்பால்விசையனுநாமஞ்செய்தா
ரியற்றுபோர்முனைகடோறுஞ்சுவேதமாவிரதமுய்க்கும்
வயத்தினால்வருஞ்சுவேதவாகனனென்பர்மாதோ. (கசஎ

கண்ணினாலென்னைநோக்குங்காவலருள்ளந்தேய்ந்தோ
ரெண்ணமுஞ்செயலுஞ்சிந்துமியற்கையால்வீபற்சாகித்
துண்ணெனவிரியுஞ்சால்பாற்றூய்மையாற்வீபற்சென்றே
விண்ணினரெனக்குநாமம்விளம்பினருணர்திமேலோய். (கசஅ

அங்கையொன்றதில்வில்லேந்துமாற்றலுள்ளவரிலன்றிச்
செங்கையோரிரண்டினம்புசெலுத்துமென்செய்கைநோக்கி
நங்குலத்தலைவர்சவ்வியசாசியாநாமஞ்செய்தா
ரிங்கிதையுணர்திதன்னூலுணர்வுடையேமத்தோளாய். (கசகூ

மட்டிலாவலிபெற்றுள்ளவானவர்முதலோரேனு
மிட்டமற்றுதிட்டிரப்பேரிறைவனையவமானித்தாற்
றொட்டவான்கணையாற்சென்னிதுணிப்பதென்றிருக்குஞ்சொல்லாற்
சிட்டினனென்றுநாமஞ்செய்தனர்தெளிந்தமேலோர். (கரு0

குருச்சுடர்மணிசெய்பச்சைக்கொழுந்துடற்பொலிவுநோக்கி
யருச்சுனனென்பரீதென்னரும்பெயர்வந்தபான்மை
செருச்செயவந்ததேவர்காண்டவஞ்சிதைத்தநாளிற்
பொருத்துகிட்டினனென்றோர்பேர்புனைந்தனர்மீட்டுமன்னோ. (கருக

ஆதலினுமம்பன்னொன்றுமெனவறிதிமற்று
மோதியபெயர்கள்வானோருலகத்தோரகிலத்துள்ளோர்
கோதறவெவருமன்பாற்கொடுத்ததேயன்றியுண்டோ
காதலான்மச்சர்கோமான்கண்களிப்பெய்தவந்தோய். (கருஉ

முப்புரநீறுசெய்தமுழுமுதலளித்தவம்பு
மொப்பறுமிருவரேனையும்பர்வான்படையும்பெற்றே
னிப்பெருஞ்சிலையுமாளாத்தூணியுமிமையோரீந்த
தப்பில்வெள்ளையாந்தெய்வதத்தமும்பெற்றுளேனால். (கருங

உருப்பமார்குணத்தோர்மூன்றுகோடியென்றுரைக்குந்தீயோர்
விருப்பறவியற்றுந்தீமைவிலக்குவான்விண்ணோர்வேந்தன்
பொருப்புறழ்தேர்மேற்சென்றோர்கணத்தினிற்போரின்மாயத்தே
வொருப்படுபுலவர்சிந்தையுவப்புறமீண்டதோர்வாய். (கருச

முரணினுமாணினாலுமுதன்மைசாலசுரர்வேறு
மிரணியபுரத்தில்வாழ்ந்தோரெண்ணிறந்தவரையீசன்
வானுயர்கணையான்மாயத்தேவாகையோடுலகினெய்தும்
புராணநல்லியற்கைநின்பாற்புலப்படாதுளதுபோலும் (௧௫௫)

மாறடுசெயலுந்தெண்ணீர்மாந்தலுமதிக்கும்போது
வேறல்வெனக்குவந்தவெம்படையிரியநூறிப்
பேறுடைநிரையுமீட்பன்பெயருதிவிரைவினென்றான்
றேறியமனத்தனாகியுத்தரன்களிசிறந்தான். (௧௫௬)

காதலுமுவப்புமெய்நாக்காட்சியுமாண்புந்தாங்கி
யாதரவென்னும்பாசத்தழுந்தியார்தருவைநீங்கி
யேதமுமிடருமில்லாதெழுங்கதிர்பனிபோர்த்தன்ன
நோதகவுடையகோவைநோன்பதம்வணங்கிநின்றான். (௧௫௭)

வித்தகத்திறல்சேர்பார்த்தன்விரைந்துதேரிழிந்துநண்பா
லுத்தரன்றன்னையேந்தியுறனுறப்புல்கிமீட்டு
மத்தனைகயுறுதிகூறவாங்கவன்மகிழ்வினோடு
மித்தகைகுறித்தான்செங்கையிணைமலர்முகிழ்ந்துநின்றே. (௧௫௮)

கனைகடலனையசேர்த்திக்காவலர்பெருமநின்னை
யினையனென்றுணராவாற்றலிசைத்துளதீமையென்பாற்
றுனையுறவளர்ந்ததந்தோபொறுத்தருள்சுரப்பதென்னா
வினையவாய்மொழிகள்கூறிமீட்டுமீதறைந்தான்மன்னோ. (௧௫௯)

கருங்கடலகடுகீண்டுபெருகுதண்கங்கைநன்னீர்
தருங்குருநாட்டோரேறேநினதுபொற்றடந்தேரூர்தல்
பெரும்புகழெனக்கென்றுன்னிவாய்ப்பதேபெரிதாய்நின்றே
னருந்தொழிலென்பாற்றெய்வமளித்ததானினைத்தவண்ணம். (௧௬0)

வாம்பரித்தடந்தேரூரும்வல்லபமெனக்குண்டென்பர்
தேம்பொழிநறுந்தார்வேய்ந்ததோளினாய்செப்புமாறென்
பாம்பணிந்தவன்றேரூர்ந்தபண்ணவற்குள்ளவெல்லா
மேம்பலோடென்பாலெய்திற்றென்பதற்கையமின்றே. (௧௬௧)

என்றவன்பலசொற்கூறவேந்தலுமுவந்துபுல்கி
நின்றவன்றன்னைமீளநீடியதருவிற்போக்கிக்
குன்றெனுஞ்சிலையுமாளாத்தூணியுங்குலவெண்சங்கும்
வென்றியோடுதவுகென்றானவ்வணம்விரைவிலீந்தான். (௧௬௨)

வேண்டியதளித்துமீளவேந்திளங்குமரன்பொற்றேர்
தூண்டுவான்புகுந்தானந்தத்தோன்றலுந்தோகைசாப
மாண்டுநீத்தனையகாலத்தாதிகாலத்தனானான்
பாண்டுவென்றுரைக்குங்கோமான்பாக்கியம்பலித்ததேபோல். (௧௬௩)

அந்தரத்தவர்கள்வாழ்த்தவாழ்ந்தபுல்லுருவினீங்கிச்
சுந்தரத்தனதுதொல்லையுருவெளிதோன்றநின்றான்
மந்திரத்துருவேறாகியற்புதம்வளரக்காட்டு
மிந்திரசாலம்வல்லோரியற்கையினிலங்கிற்றன்றே. (கசூச)

மாண்புடைமைந்தன்றொல்லைவடிவொடுதேரிற்றோன்றக்
காண்படுமளவிற்றந்தைக்கதிர்மணிக்குழையும்பூணும்
வாண்படுமிரவியேய்க்குமகுடமும்புனைந்தானொன்னார்
நாண்படுதேசினோடுமொளிர்ந்தனனரனும்நாமன். (கசூரு)

வட்டவெங்கரத்தோனென்னமல்குதேர்மீதுநின்ற
கட்டழகுடையகாளைமீளவுங்கருதியூற்ற
மட்டறுதேரின்மல்குமடங்கலங்கொடியைமாற்றி
யிட்டமாந்தனதுதொல்லைக்கவிக்கொடியெடுத்துயர்த்தான். (கசூசூ)

தனஞ்சயன்வரத்தால்வந்ததனிக்கொடிநினைத்தபோதே
தனஞ்சயன்றேரின்மீதுதயங்கல்கண்டரிப்பதாகை
யினஞ்செயாதென்றுவன்னிப்பொதும்பரிட்டிரதமூர்ந்தே
கனஞ்செய்பாதவத்தையன்பால்வலம்வந்துகடுகிப்புக்கார். (கசூஎ)

வேறு.

இருகரங்கொடுகிரீடிவான்பெருஞ்சிலையேந்தி
முருகுலாவுதார்ச்சூட்டிநற்பூசனைமுற்றிப்
பெருகுநாரியுமாட்டினனுலகெலாம்பெயரு
மொருமடங்கலொத்தெழுந்ததாற்றெறித்தநாணோசை. (கசூஅ)

மருவிருந்தொடைத்தடம்புயமகபதிமதலைப்
பெருமிதம்படவளைத்தலிற்பிறங்குநாணொலியாற்
செருமியெங்கணுங்கரிபரித்தேர்மிசைநின்றோ
ருருமின்வெங்குரல்கேட்டகோளுரகமோடொத்தார். (கசூகூ)

கரத்தில்வால்வளைதாங்கிச்செங்கலவைவாயிதழ்வைத்
தாத்தவொண்கணன்குறித்தலாலடகவரையு
முரைத்தவேனையபருப்பதங்களுமதிர்ந்துட்கி
விரித்தமீன்கணமுதிர்ந்ததால்வேலைநீர்சுவறி. (கஎ0)

குறித்தசங்கொலிசிங்கநாதத்தொலிகுனிவிற்
றெறித்தநாணொலிசெவிபடச்சிந்தைகலங்கிப்
பொறித்தபார்வையினுத்தரன்பொறிமயக்குற்று
மறித்துவீழ்ந்தனன்மாவிடுதொழிலையுமறந்தே. (கஎக)

காண்டவங்கனற்குணவுசெய்காளைகண்டெடுத்து
நீண்டகைகளாலேந்திமாமலர்முகநேரிற்
பூண்டசாமரைவீசியாங்கவனயர்போக்கி
மீண்டுமுத்தரன்றனக்கிதுமொழிந்தனன்விசயன். (கஎஉ)

பொருப்பிலாயதிண்டோளினாய்ப்புலன்பொறிமயக்குற்
றிருப்பதென்வளையோசையின்பொருட்டினுக்கென்ன
விருப்பமிக்கவாண்முகமலர்ந்துததியேழ்மேவிற்
பெருக்குஊழிவாயெழுமொலியிதனினும்பெரிதோ. (௧௭௩)

பட்டபல்லொலியுளவெலாமிவ்வணம்பாரின்
மட்டிலற்புதம்விளைக்குமோகேட்டவர்வானி
லட்டமாத்திரத்தெல்லையூடார்கொலோமயங்கார்
கிட்டியான்மயக்குறுவதுங்கேண்மையன்றாமோ. (௧௭௪)

என்றுகூறினன்மைந்தனுமவனையன்பெய்திக்
குன்றுபோலுயர்தோள்களாற்றழுவிவான்குலத்தேர்த்
துன்றுவாம்பரிமயக்கறுமந்திரஞ்சொற்றே
வென்றியெய்துவைவிரைந்துதேர்விடுதியென்றிசைத்தான். (௧௭௫)

மச்சநாடன்மாமதலையுமன்னவனன்பா
லச்சமற்றிருந்துளுவுகோலங்கையிற்கொள்ள
வுச்சவானமத்தினகரனூர்ந்ததேர்பூண்ட
பச்சைவாசியிலோடினசுவேதவெம்பரிமா. (௧௭௬)

படுங்குறும்பனிபுதைத்தலிற்பருதிதன்னுருவ
மொடுங்குமாறெனவொளித்ததன்பேடுருவொழிந்து
நெடுங்கொடுங்கணைநிருபன்வெஞ்சேனையில்வேந்தர்
நடுங்குமாறுமுன்றோன்றினனரனெனுநாமன். (௧௭௭)

வாமத்தேர்மிசைவருங்கவித்துவசனைக்காணா
வேமத்தேர்மிசையிருந்தநான்மறைக்கொடிக்கிறைவன்
றாமத்தேர்வலம்புரியினான்றனக்கிதுமொழிந்தா
னீமத்தேநடமியற்றுவோனிவனெனுமிசையான். (௧௭௮)

வேறு.

ஒருதேர்விசையான்மணிமாசுணனென்றுற்றானே
தருநாணொலியாலிமையோருலகுஞ்சலியாவோ
செருவெள்வளையெண்டிசையுஞ்செவிடாச்செய்யாதோ
கருதாதொருவன்பொருமாறெதிர்தல்கண்டாயோ. (௧௭௯)

சோதிக்குழையுஞ்சுடர்மாமுடியுங்கதிரோடு
வாதிட்டொளிரப்படர்வோன்மகவான்மகனாமாற்
பாதிப்பிறைபோலெயிறார்நிருதப்படைகையாற்
காதித்திகழ்மாருதிவாழ்கொடியேகரியன்றோ. (௧௮0)

வெற்றிச்சிலைகொண்டுலகேழையும்வெல்குதுமென்னுங்
கொற்றத்துடனாரையுமோர்பொருளாக்கொளலின்றிச்
செற்றத்தரியேறெனவந்தனன்மேற்செயலென்னே
பற்றற்றினிவாகினிசெங்கதிர்முன்பனியாமால். (௧௮௧)

ஆழ்பேரறிவோனினிவந்தருசெய்தினனென்னிற்
சூழ்போர்நிருபர்க்குளிலாரமர்செய்தோற்றத்தா
ரேழ்பார்புகினுந்தொடர்வானவன்வந்தெதிராமுன்
வாழ்பேரரசேநகர்போய்க்குறுகில்வசையன்றே. (கஅ௨)

நின்றேமெனிலிங்கிறுவேம்பலதுன்னிமித்தத்தால்
வென்றேமெனவின்றரிதாமதனால்விறலோடுங்
குன்றேயனையாய்நிரைகொண்டினதூர்குறுகுற்றா
லொன்றானலனஞ்சினனென்றிகழாதுரைகேண்மோ. (கஅ௩)

பரவுங்குரவன்கிருபன்சுதனம்புவிபாலர்
விரவும்படிநின்றமர்தந்துணர்வன்பேநந்தெயா
னரவின்கொடிவீரிதந்தனையுய்த்தருளென்னக்
குரவன்புகலுங்குணராஜசன்குறிக்கின்றான். (கஅ௪)

வேறு.

வாராய்சதுர்வேதபாராயணனேவாய்மைக்கொருபாண்டுதரும்புதல்வர்
சீரானுயர்நாடுமரும்புரமுந்திருவும்பிரிவுற்றனர்சூதுபொரா
லேசாரிமையோர்தினமாறுடனுறிகலார்வனமூடுமொரேதினமியாந்
தேராவகைநாட்டினும்வைகுமுறைதெளிவிற்பலர்சொற்படிதேறியநாள். ()

மற்றோன்றுளதவ்வொருநாளுலகின்மறைவாயுறுபோதவரைத்தெளியி
னுற்றன்றுமுதற்பதிமூன்றெனுமாண்டுறுவார்வனமூடெனுமிவ்வுரையாற்
பற்றொன்றுமிலாதவருச்சுனனேபடர்வானெனினன்மையயக்குமலாற்[மே.
சுற்றம்வினைநம்வயினென்னுளதாந்தொலையாமுனமாண்டெதிர்த்தோற்றியு

மாறுபெருஞ்சமர்வல்லவரிம்மாமச்சனகர்க்கணிருந்தபடி
தேறாதடைகுற்றனமோவிரதஞ்சிந்தும்படியாம்பலர்சிந்தனைசெய்
தூறுருடலத்திரிகத்தனைமுன்னுய்த்தோர்திசையாயிவனுற்றவெலாம்
பாறுடுகளத்தில்வெளிப்படுவார்பகர்பாண்டுசிறாரெனுமாறலவோ. (கஅஎ)

அவ்வண்ணமருச்சுனன்வந்தெதிர்நின்றமர்செய்யினடுக்குமருந்திறலு [லா
மெவ்வண்ணமுமாங்கவர்மீளவனமெய்துஞ் செயலோர்தினலோபமெ
முவ்வண்ணமுறச்செய்குலக்குரவனுணர்வானவனேநிறுவற்குரியா
னிவ்வண்ணமிருப்பவினித்தவர்போலெனைமாநகர்செல்கெனலேதுரையாய்

தேராளிதனஞ்சயனேயெனினுந்திசைகாவலர்வானவர்கந்தருவர்
போரார்நிருதேசரியக்கர்முதற்புகழோர்பலர்வந்துதகைந்திடினு [ற்
நேரார்நிரைகொண்டனமென்னினிமேனிகழுஞ்செயலொன்றுளதோசமரி
போராதிகல்வென்றுதுரந்துவயம்பெற்றேகுவமாறெடுபேரறிவோய். ()

செருவென்னுமுரைக்குமுனம்விழிகள்செப்பத்திறலோரிலரும்படை
கொண்,டுருமென்னவதிர்த்தணிதேர்விசையோடுரையின்விசைகாட்டியடை
ந்ததெலாம், வருமொன்னலர்நேர்பெறமாழ்கியுளம்வாடித்துயராலொருவர்
க்கொருவர், திருவார்முகம்நோக்கியுயிர்த்திடவோதிறல்கைக்கொளவோவி
துதேர்ந்துரையாய். (கக௦)

வில்லிற்றலைமைப்படுவேந்தரெலாம்விசயன்செருவல்லனெனத்தளருஞ்
சொல்லிற்றலமுள்ளவரும்பிறருந்துணையங்கையறிந்துநகர்கொலினி
மல்லிற்றிணிதோளுடையோன்வரலால்வயமற்றுமடங்கிநகர்த்தலையிற்
செல்லிற்புகழோவசையோவுரையாய்தெருளுரைவியந்துளதேசிகனே. ()

வருவெம்படையெண்ணறுகோடியெனுவலிகாட்டியதிண்சிலைவல்லவரிங்,
கொருவெஞ்சிலையோனைவிலக்கிலரேலொன்றொதிரோரிரதத்தில்வருந்,திரு
வெம்புயனெவ்வணமோர்சிலையாற்றிறல்கொள்ளுமிருந்தவர்தம்மையெலாம்
பொருவன்மையிழந்திலனுருயிரோபுகழோபெரிதாவதுபுண்ணியனே. ()

தேசார்சிலையாரியனன்னெறியோர்திறத்தோடுசிதங்கண்மொழிந்துணர்வின்
மாசாயவலன்சிலநூல்வழியேமதியுள்ளவருக்குரைசெய்யவலன்
றாசாமுனையிற்சமர்செய்துதவாதொழிலன்றினிநீர்முனையிற்றொடர்மின்
பேசாதவர்பின்னுறநின்றுவயம்பெறவுன்னுவரென்றுபணித்தனனே. ()

பொற்புக்கொருவன்சொல்செவித்துணையிற்புகுமுன்சிலையாசிரியன்குமரன்
வெற்புக்கிணைமொய்ம்பினைநோக்கியிருவிழிசேந்தரசுக்கிதுகூறினனு
லற்புக்கொருவீடுமனெண்கிருபனணியாதபன்மைந்தனடற்றுணைவர்
சொற்புக்கநெறிக்கணிருந்தவர்கண்டுணைமூடியுளங்கடுணுக்குறவே. (௧௬௪)

வேறு.

கோக்கணங்கொண்டதுங்குழுச்செய்வாகினி
மாக்கணமடைந்ததும்வயத்தின்பாலவாய்த்
தீக்கணமுமிழ்வசைசெப்பல்போதுமோ
தாக்கணங்குலவுமேவற்றனுவலானையே. (௧௬௫)

அண்டரைத்துரந்திவனுன்கொண்டோமுதற்
பண்டுமெச்சூதினுற்பார்பறித்துளோங்
கண்டதித்துணையிதற்கென்னகட்டுரை
மண்டமர்முனைத்தலைவெளவினோர்கள்போல். (௧௬௬)

காரியங்கடகமென்றிரண்டுங்காட்டுத
லாரியர்கடமையென்றுரைக்குமாதலாற்
பாரியலுரைத்தனன்படையின்முந்திநீ
வீரியஞ்செலுத்தலையார்விலக்கினோர். (௧௬௭)

போர்முகங்களின்முனம்புறந்தந்தாயிலை
கார்முகத்தொடுமொன்னார்கைப்புக்காயிலைத்
தேர்முகத்தெவரையுஞ்செருவெல்வாய்நினை
யூர்முகஞ்செல்கெனவுரைப்பதேகொலாம். (௧௬௮)

பாரகஞ்சூதினுற்பறித்துப்பாண்டவர்
தாரமாந்துருபதன்றனையைதன்னையும்
போரவையேற்றுநாட்சகுனிபேசிய
வீரமன்றிதுசமர்விளைத்தல்வேந்தனே (௧௬௯)

மாதுலனியற்றியகருமம்வல்விரைந்
தேதுவில்வளர்ந்துவந்தெய்திற்றீண்டுநீ
யோதலென்றொருவர்முன்புறுதற்பாலரோ
சூதிழைத்தவன்முனைதுன்னனீதியே. (௨௦௦)

மண்ணினும்பிலத்தினும்வானகத்தினு
மெண்ணுறநேரற்றவனிகளும்போர்முனை
நண்ணுமாற்றவரிலையெனினுநன்கலா
வண்ணவாய்மொழிக்கெவர்வலியற்றோர்களே. (௨௦௧)

தவமதிச்சிலைவலாசிரியன்றன்னைநீ
யவமதித்துரையலாதறையவல்லைநீ
குவலயத்தொருவனொத்தெதிர்ந்தகோமக
னவமுறப்புகுமுனைநாடவல்லையோ. (௨௦௨)

இம்மொழிக்கிம்மொழியெடுத்தியம்பிய
செம்மலுக்கெம்மனோர்செருமுகத்திரோம்
வெம்முனைபோலநாண்விடுத்தவேதிய
னம்மொழிக்கிடைகலனமருமாற்றுமே. (௨௦௩)

அந்தகன்றனைவடவனலைக்காலத்தை
முந்துமெண்டிசையினைமுனைவென்றெய்தது
மிந்திரன்மகனையாமெய்திவெல்கிலோஞ்
சிந்தைகொண்டுறுதிநீதெளிதிவேந்தனே. (௨௦௪)

என்றுபற்பலமொழியிவுளித்தாமனுங்
குன்றுறழ்தோளினன்குறிப்பக்கோமருங்
கொன்றியபார்த்தனுதவுமங்கர்கோன்
வென்றிவேற்குரவருக்கிளைதவிளம்பினன். (௨௦௫)

நிரைகொண்மாநகர்நீங்கிமேவினோர்
விரைகொடாரொருவனைவியந்துபல்விதங்
குரைதான்மேன்மையேகுந்திநந்தவ
ரெரிகணைக்கஞ்சுவாரேதுக்கெகப்தலே. (௨௦௬)

அச்சமுண்டெனிலிருந்தறிமின்காரிருட்
குச்சிவெங்கதிரில்யாரொருவனேற்றம
ரிச்சையிற்பாகுதேரிவுளிவான்கொடி
கைச்சிலைதுணித்தடல்காட்டுங்காட்சியை. (௨௦௭)

விண்ணையுமண்ணையும்விளக்குந்தேர்மிசை
துண்ணெனவெய்தருச்சுனவெந்தீயினைக்
கண்ணெலாங்காணவிக்கணத்திற்கார்முக
நண்ணுவான்கணைமழைதல்கிமாய்ப்பனால். (௨௦௮

பன்னிரண்டொன்றெனப்பகருமாண்டெலா
மின்னிலைமாசடைந்திருக்கும்வான்சிலை
முன்னர்கொண்டணுகினோன்மொய்ம்புமேனியுஞ்
சின்னபின்னம்படச்செய்வன்காண்மினோ. (௨௦௯)

அருச்சுனன்றனக்கெதிரங்கர்கோனென
விருப்பதிவ்வுலகெலாமியானுமோர்சிலை
பொருப்பெனத்தாங்கிவெம்போர்வலாளரி
லுருப்பெறுந்தன்மையின்றுணர்மின்யாருமே. (௨௧௦)

குரம்படுபாய்பரிகுலத்திற்றேரினிற்
சரம்படச்சாய்ந்தருச்சுனனைத்தாழ்தடங்
கரம்படவுரம்படக்கவித்தமாமுடிச்
சிரம்படவிரைந்தமர்செய்வன்காண்மினோ. (௨௧௧)

வேறு.

நரபதிதன்செஞ்சோற்றுக்கடனும்வெய்யோனந்தனனிலருச்சுனனிலாரேமிக்க, வுரனதிகரெனவிருப்போர்க்கையப்பாடும்பர்பிரான்மகன்றலையான்றுணிப்பனென்றே, வரனதிகர்பலருணரவவையிற்கூறும்வஞ்சினமுந்தீர்த்துமழுவல்லோன்றந்த, சரமிகுவிஞ்சையினிலமைநிலைசெய்காலஞ்சார்ந்ததினிக்காண்மினெனச்சாற்றினானே. (௨௧௨)

ஒருதேரிலொருசிலைகொண்டொருவன்றோற்றவொருகோடிநரபாலர்தியங்குமாறென், வருதேர்முன்பெனதொருதேர்க்கடவியின்னேவயங்கொணர்வனீரிருந்துமதிக்கவென்ன, வெருதேறிநிகர்குரவனமுதலாவுள்ளோரியாவருக்குமிரவிமகனியம்பல்கேளாத், தருதேரினிடைக்கிருபனென்னச்சாற்றுஞ் சதுர்மறையோனிந்தவுரைசாற்றினானே (௨௧௩)

சாமமொடுபேதமியற்றானமூன்றுதனக்கப்பாலுள்ளதருந்தண்டமென்பர், வாமமுலவியவயிரத்தோளாயீற்றினமருவுமொருசமர்மலைதலுணர்ந்தாயன்றிச், சேமமுறுமொருமூன்றுமுணராய்த்தேர்ந்தோர்செப்புவதும்பொருளாகச்செய்யாய்வெம்போர், தாமதருக்குறுதியதாமுறையானன்குஞ் சாத்துவிதமுடையார்க்குத்தக்கதாமே. (௨௧௪)

காரியத்தின்முறையனைத்துங்கருதிப்பின்னர்கடுஞ்சமரிற்றலைப்பட்டார்க்குலகிற்பொன்றா, நேரிசைத்தற்கரியபுகழெய்துமென்றேநீதிநூலினர்புகழ்வாதுவுமன்றி, வீரியத்தில்வரும்படையின்வலியுங்காலவிளைவுமிடந்தமதுவலிவிளங்கனோக்கிப், போரியற்றலெத்தகையவலியோர்க்கேனும்புகல்கடனாந்திசைநாறும்புலவுவேலோய். (௨௧௫)

தேராவதொன்றென்றுஞ்சிலையொன்றென்றுஞ்சிலைவபவன்றமியனென்றும்புகன்றாயன்றோ, பாராளும்வேந்தனோடுகுழுவாய்நின்றபல்லோரைநின்னையொருபொருளாச்செய்யான், போராளிகரிகடம்மேற்புகுமாறென்னப்புகுந்தனனாங்கவனைதிரிற்பொருவாருண்டோ, நேராய்சொன்முப்புரமுநீறாச்செய்தசிவனொருவனெனும்வாய்மைச்செருவலோனே (௨௧௬)

சீர்படைத்ததிணிதோளானுயர்பாஞ்சாலன்றிருமகளுக்கணிமன்றல்செய்தநாளிற், பார்படைத்ததிறல்வேந்தரொருவரோரோர்பகழிமுனைதனிலிரியப்படுத்துவென்று, வார்படைத்தமுலையாளைவேட்டகாளைவருகின்றனவனுடனூர்மலையுநீரார், தார்படைத்தமணிமுடியாய்நீயங்கன்றுசார்ந்திலையோதேர்ந்திலையோசாற்றுவாயே. (உகஎ)

கொடும்போர்வல்யதுகுலத்தோர்தம்மைவெற்றிகொண்டுசுபத்திரையைமணம்புணர்ந்தஞான்றுங், கடும்போர்செய்தமரரைவென்கண்டுமுன்னங்காண்டவம்வெங்கனற்குண்டியளித்தஞான்று,மடும்போரிலுத்தரவெங்குருகண்டத்தோரடிதொழுதுநிதியுதவவென்றஞான்றுஞ், சுடும்போர்வெங்கணைதுரப்பத்தேறிற்றேற்றுந்தோன்றலொருதமியல்லாற்றுணையார்சொல்வாய்.()

வட்டவரிவில்லேந்துங்காலகேயர்வாமுமுயர்தோள்வலியுங்கிழித்தபோதுந், துட்டரெனுநிவாதகவசரையோரம்பாற்றொலைத்தடலையெனக்கழித்துத்தோன்றும்போது, மட்டதிசைபுகழ்தருகந்தருவர்கோனையழித்தரசைவிடுவித்தங்கமர்ந்தபோதுங், கட்டழகன்றனக்கெவரேதுணையாய்வந்தோர்கைச்சிலையேதுணையலதுகண்டதுண்டோ. (உகக)

மாறுடும்புயவலியேனென்றுவேந்தர்வருஞ்சபையிற்புகல்வதலாலுரையின்வண்ணந், தேறுரையெங்ஙனநீவென்றாய்நீசெய்செருவெங்கேநாற்கெதிர்நீசெல்வதென்னே, யாறுருஞ்சடையானுமரியுமேனையமரரும்வந்தெதிர்மலைதற்கரியோனென, பாறுடுஞ்சிலைக்கொருவன்வீரம்நீயோபழித்தரசரெதிர்வயநீபடைப்பாய்மன்னே. (உஉ0)

கோமுனியுஞ்சிலைக்குருவுமவர்பாற்றோற்றுங்குகனனைய திருமகனும்யானும்நீயுந், தேமருவுவலம்புரித்தார்த்தேயவேந்துஞ்செகம்புரக்குமகிபாலர்பலருமொன்றாக், காமருதேர்க்கடவிமுனைகலந்தபோதுங்கடக்கரிதாங்கவலையெனக்கருதுவோர்க்குப், போர்முனையில்வெல்வதொருதமியனென்றாற்போர்ததபனிகதிரைவயம்புனைவதுண்டோ. (உஉக)

நீராருங்குருநாடனுனதுபாங்கர்நேயமுளனெனிலவனுக்குறிதிவாப்பப்,பாராளுமுறைபுகறலியற்கைவாளரப்பலவாய்மைசாதமெனப்பகர்ந்துபோரில், நோரார்கைப்படவிழித்துநித்தறுனேநீயறிந்ததினிப்போதும்போதுமென்றான், றோராமலமரரையும்வெல்லும்வகைத்தோளுடையகிருபனெனுந்தூயோனம்மா. (உஉஉ)

வேறு.

ஆசானுரைசெவிவந்துறவனல்சாரிழுதென்னத்
தேசானுயர்கதிர்தந்தவனிருகட்கடைசிவவா
மாசானுயர்மொழிபற்பலவகுத்தோதிவெகுண்டே
தூசார்முனைவேந்தர்க்கெதிர்விழிவைத்திதுசொன்னான். (உஉ௩)

மட்டார்தொடைமுடிமன்னவன்வளமுள்ளனவெல்லா
நட்டாரொடுதுய்த்தின்பநலம்பெற்றவர்சமர்வா
யொட்டாரையெந்தங்கவருயர்தோடுதிசெய்தாற்
கிட்டாதுளகொல்லோநெறிகிளரும்பயனிவர்பால். (உஉச)

நனிவெந்திறலுளனென்றுபகர்ந்தாலதினயனென்
னினிதுங்கண்மனத்தன்புளதெனிலங்கவனொருவன்
றனிவந்திடல்பொருளன்றவனொடுமேவுறறகையா
மினிதன்றெனினுமர்வாழ்மனையெய்தற்கிணையிலையே. (உஉரு)

அவனுக்கெதிர்யானேயெனையவனேவிறல்பெறுவான்
சிவனுக்கெதிர்மதனிற்பொடிசெய்வேனொருகணையா
லவனித்தலமுயரம்பரமகலும்பிலமெங்குந்
தவறிற்றுயர்பெறுமென்கணைதனிலென்றுகோதித்தான். (உஉசா)

நாமத்துயர்கைவண்மையனிதுகூறலுநாப்பண்
சேமத்துறுநிதிபோலொருதேர்மீதுறுகுரவன்
மாமத்தமணிந்தோனெனவருவேந்தனைநோக்கி
நேமித்திதுசொன்னான்றலைநிகரொத்தவுளத்தான். (உஉஎ)

சிலையாரியனுரைசெய்ததுமமிதிக்குயர்திறனுங்
கலைதேரியபுதல்வன்புகல்கழறுஞ்செயலாமா
னிலைசேர்ருபன்சொற்றதுமநுநூன்முறைநெறியே
யிலைவேலொளிர்கதிர்மைந்தனிசைக்குந்தாமன்றே. (உஉஅ)

செல்லுந்திசைகாலம்பலசெயலேதுவுநாடி
வெல்லும்பகைவலிதென்றகமுறுமெய்யுணர்வுடையோர்
செல்லுந்திறனெறிபோந்திகல்சோர்வெய்தினும்வசையோ
மல்லுங்குலமலையும்புரைவளருந்திணிதோளாய். (உஉகூ)

ஒட்டார்பிறர்நிலமூடெழுமுச்சிக்கதிர்போல்வந்
தெட்டாமுனமுனைபுக்கமரியற்றுந்திறலோரை
விட்டாங்குவிடுத்தேகவிளம்பற்கிதுதகவோ
முட்டாண்முளரிக்கன்புடைமுதல்வன்றருபுதல்வன். (உ௬0)

வீரம்பகைநண்பென்றுவிளக்கற்கரிதெவரும்
போரஞ்சுவதிலையாகியபுயமுள்ளவர்தமது
தீரந்துதிசெல்வார்முனைசேர்ந்தாலமர்செய்தே
வாரம்பெறவிகல்வெற்றிவிரிப்பார்மதியுள்ளோர். (உ௬க)

இதுசெய்வதிலிதுவந்துறுமெனநாடியுணர்ந்தோர்
கதுவுஞ்சமர்பொருகாரியநிலைகூறுதல்கடனு
முதுவேதியரிவர்மூவருமுதன்மூவரிலன்றோ
கதிர்தந்தவனவரோடுரைகழறற்குரியவனே (உ௬உ)

வெல்லுந்தாமுடையோர்செவிசுட வெஞ்சொல்வழங்கி
மல்லொன்றியபுயவேதியர்மனநோதல்புரிந்தீர்
சொல்லுந்தாமன்றுலிதுவெனவங்கைதுளக்கி
யெல்லொன்றியபுகழானவர்மகிழ்வெய்தவியம்பும். (உகூகூ)

வேறு.

வழிபடத்தொழுதுபோற்றவழங்குநன்னெறியாராய்ந்து
விழிபடுகருணைசென்னிமேற்கொளற்குரியரன்றித்
தெழிபடப்புன்சொற்கூறத்தெழிப்பமற்றவரைவாளாப்
பழிபடப்புகறற்கெல்லாமுரியரோபகர்ய்வேந்தே. (உகூச)

என்றுபற்பலசொற்கூறியிராசசானேவெறுத்து
நின்றுகைம்முகிழ்த்துநெஞ்சினேயமுமன்புந்தோன்ற
வன்றுநற்கிருபனுசானச்சுவத்தாமனுகி
வென்றியமுதல்வர்தம்மோடிம்மொழிவிளம்பினனே. (உகூரு)

சொற்றநல்லறிவிலாதசிறியர்புன்சொல்லையெல்லாங்
கற்றறிவுடையோரெண்ணராதலிற்கருணைநீராற்
குற்றம்வந்தெய்தாவண்ணம்பொறுத்தருள்கூரவேண்டும்
பற்றலரெதிர்ந்தகாலத்திவையொன்றும்பயன்படாவே. (உகூசா)

ஆதலாற்புகல்வதென்னேயருமறைக்கடலுமார்க்குங்
காதல்சேர்சிலையின்வேதக்கடலுமாங்கிரண்டுபாலு
மேதகுமுளத்திற்றுங்கிவிளங்குந்தேசிகர்நீர்யாரே
யேதந்தீருமைநோமியற்கையோரெண்ணற்குண்டோ. (உகூஎ)

குருகுலநாதன்சேனைக்கோர்பழிகுறுகிற்றுண்டோ
வருகுறுமவரினீரேயாற்றலும்புகழும்வல்ல
திருகறுதலைமைவாய்த்தசெய்கையரதனுனும்பால்
வருமெனவுணர்வீரேனோர்தமையெவர்மதிக்கற்பாலார். (உகூஅ)

தனதுளத்திருந்தசிற்றம்பலவெனிற்சயர்வாயொன்றுந்
துனிவுறக்கருதலாகாதப்பெருந்தோன்றற்கென்று
மினிதுறப்புகழ்வந்தெய்துமியற்கையேகருதலென்று
மனுமுறையுரைக்குந்தொன்னூலுணர்வுளீர்மதியான்மிக்கீர். (உகூகூ)

மறுப்படவுரைத்ததெல்லாமன்னன்மீதருளாலைய
பொறுத்தருள்சுரத்தல்வேண்டும்போர்க்குறித்தெய்துங்காளை
யெறித்தசெங்கதிரோடொப்பானிமம்படுநமதுசேனை
வெறுப்பென்னைநமதுசிற்றம்வேந்துடைத்தவமாமென்றான். (உச0)

கருதருங்கங்கைமைந்தனிவ்வுரைபகரக்காசில்
விருதுடைக்கன்னனேடுவேந்தனுங்குருவைப்போற்றி
வருதகையுணரேஞ்சொற்றவாய்மொழிபொறுத்தியென்றே
கிருபனச்சுவத்தாமற்குங்கேதங்களகற்றினுரே. (உசக)

பார்தருமெயிற்றாவெம்பதாகையான்முகமன்கூறச்
சீர்தருதுரோணன்சிற்றந்துறந்தருஞ்சிறப்பினோங்கி
யேர்தரவாசிநல்கியிருந்தவீடுமனையாதி
போர்தருவயவர்க்கிச்சொற்புலப்படமொழிந்தானன்றே. (உசஉ)

தோடுறுதெரியல்வேந்தன்சொற்றசொல்வெகுளியென்னு
மீடுறுதுன்பந்தந்ததிமையவரிருகைகூப்பும்
வீடுமனுரையோர்வெலாய்வீட்டியத்தனைமேலாய
நாடுவதென்னசொன்மினாபதிக்குறுதியெண்ணி. (உசங)

போரிருந்தியற்றும்போதிற்புரவலன்றனித்தபாங்கர்க்
காரிருந்தெரவிக்கும்வில்லான்கணையினூலூறுண்டாமேற்
றேரிருந்தென்னேகோடித்திரளிருந்தென்னேமேலோ
ராரிருந்தென்னையெய்தலரும்பழியல்லாதுண்டோ. (உசச)

நேர்படமேவுமாயோனிச்சயம்பார்த்தனீலத்
தேர்படுமேனிசொற்றதிவனுடன்மலைதலொன்றே
சீர்படுவழக்கிற்கானஞ்செல்கெனலொன்றேநாடிக்
கூர்படவுரைமினென்னவீடுமன்குறிப்பதானுன். (உசரு)

வழக்கினாலவரைக்கானின்மருவுறச்செய்யவல்லோர்
நிழற்படுபுவியினில்லைநிறைந்தவாண்டொருபான்மூன்று
மெழிறருமதிகமாகத்தேறுநாள்கூட்டினென்னற்
கழித்தனரின்றுபோரிற்கலக்குமாறெய்தினாரால். (உசசு)

பகர்மொழிபிசகார்நன்றிப்பாசத்திற்பிழையார்வானோர்
புகழ்தருமியலார்வாய்மைபொய்ப்பநாட்செல்லாமுன்ன
மிகலில்வந்தடைவதுண்டோவிழுக்கவரிடத்துண்டாமேற்
புகருறுமவையிலன்றென்பொறைமடுத்திருந்தார்மன்னோ. (உசஎ)

சென்னலேகன்னல்காட்டச்சேர்ந்தயற்செறுவில்நின்ற
கன்னலெகமுகுகாட்டுங்கங்கைநீர்நாடன்கேண்மோ
வின்னலேயுழந்தோர்காலமிந்துவினியக்கந்தன்னால்
நென்னலேகழிந்ததென்றுனெஞ்சிலேயழுக்கிலாதான். (உசஅ)

தன்குலக்குரவன்கூறத்தராபதிசிந்தைவாடி
முன்குறித்திடுநாள்சென்றுமின்றுமம்முறைபோய்வைக
நன்குறக்குறிப்பனன்றிநாடவர்க்களிப்பதுண்டோ
மின்கொலைச்சிலைவல்வேந்தர்கேண்மினென்றிதுவிளம்பும். (உசகூ)

செய்த்தலைவளைகளாரஞ்சிந்திநீர்தடைசெய்நன்னா
டுத்தமநகரொன்றேனுமவர்பெறவுதவமாட்டேன்
மித்திரவசெஞ்ஞான்றுமாகலர்விறற்போர்வென்றே
முத்தலம்பெறினுநன்றுமென்றனன்முதன்மைவேந்தன். (உருO)

வீடுமன்மொழியும்வேந்தர்வேந்துளக்கருத்துந்தேறிச்
சூடும்வெண்டும்பைநாறுந்துரோணனீதெடுத்துரைத்தான்
பீடுடைநிருபரேறேநினதுளம்பிடித்ததீதேற்
கூடுமானிரைகொண்டின்னேசெல்குதிகுறித்தவண்ணம். (௨௫௧)

தானையையிருகூறாக்கித்தக்கமானிரையுங்கொண்டு
சேனையிலொருகூறோடுஞ்செல்வதேகருமமீண்டிங்
கேனையகூறோடாருமிருந்தமரிழைத்துப்பின்னர்
மாநகரடைதுமென்னமறையவன்போதித்தானே. (௨௫௨)

விரதமாமுனியுஞ்சாலமேன்மையாமென்றுகூறி
யிரதமாகரிபதாதியீரிருகூறதாக்கி
நரபதிக்கொருபானல்கிநன்னிரைக்கொருபால்காவற்
றரவெனவமைத்துவேந்தன்றனைச்செலவிடுத்தான்மன்னோ. (௨௫௩)

குரவர்மாமொழியாலந்தக்கோமகனகரிற்சேர்வா
னரவுயர்கொடித்தேரோட்டியகன்றனனணிகஞ்சூழ
விரவுமவ்வேந்தின்முன்னர்விறற்பெரும்படைஞர்பல்லோர்
விரைவினினிரையுங்கொண்டுசென்றனர்மேன்மையோடும். (௨௫௪)

இத்திசைதுரோணன்கங்கையீன்றவனிவுளித்தாம
னுத்தமக்கிருபன்கன்னன்முதலினோருரைத்தகூறுங்
கைத்திறற்றுணையோடுங்கலிக்குமார்கலியினின்று
ரெத்திறத்தவருமுன்னரெய்துதற்கெஞ்சிவாடி. (௨௫௫)

உத்தரங்கிருபன்காக்கத்தெக்கணமுயர்விலாசான்
புத்திரன்காக்கத்தூசியிரவிசேய்புகுந்துகாக்கத்
தத்துபின்விகர்னன்காக்கச்சயிந்தவன்சகுனிசோம
தத்தனுதியர்கள்சேனையிடையிடையிருந்துதாங்க. (௨௫௬)

போக்கரும்புகழ்பெற்றுள்ளபுண்ணியசீலனோடு
தேக்கியமகிழ்வினோங்குந்தேசிகனடுவேநின்றான்
மேக்குயர்கவிகையாலவட்டங்கள்கொடிகள்விண்ணிற்
றூக்குறமுரசினோசைசெவிடுறத்தரணியெல்லாம். (௨௫௭)

இங்கிவர்துணிவுஞ்சேனையிருந்தயூகத்தின்வாய்ப்பு
மங்கரசானினோடுமகன்றபண்பதையுங்காணாத்
துங்கவானவர்கள்வேந்தன்சுதன்வலிதெரிவதாகப்
புங்கவருடன்வந்துற்றான்வானிடம்போர்ப்பமாதோ. (௨௫௮)

அந்தரதலத்திலாருமடைந்தபின்பரிசொலாலே
வந்தனன்பாண்டுவென்னுமகிபனும்போகியோடு
முந்தருகாசனத்திலிருந்தனன்முன்னர்த்தந்த
மைந்தனல்வரவுகண்டுமாமகிழ்வெய்துந்தோளான். (௨௫௯)

வேறு.

வானோரொடுவாசவன்வானிலுற
வேனோரணிசெய்திகலேற்றுளராய்த்
தேனோடுறுதாரினர்சேனொளிரத்
தானோரிரதத்தினன்சார்ந்தனனே. (உசா0)

உடைபட்டதுவான்முகடும்பரெலா
மிடைபட்டனர்பூழியில்மேதினியப்
படைபட்டதுபட்டதுபார்த்தனிக
னடைபட்டுறுதேருருணல்கொலியால். (உசாக)

இவ்வாறிவனேகியிரும்படைநேர்
செவ்வேபுகவந்துகைசேர்ந்திடலு
மவ்வாகினியாற்றநடுங்கியதா
லுய்வேதினியென்னுமுளம்பெறலால். (உசாஉ)

அக்காலையருச்சுனனப்படையிற்
றிக்காலுறுமன்னர்திறந்தெரியா
முக்கோலமுறச்சென்முனைப்படைகண்
டக்கோமகனோடுறைவானறிவால். (உசாங)

வாராயரசன்றருமாமதலாய்
நேராவிரகென்சொன்னிணிரைகொண்
டோராதிறையேகினனூர்புகுவான்
போராயெதிர்நின்றவர்புண்ணியரே. (உசாச)

இவரோடமரேற்றனமென்னிலிறை
கவினார்நிரையோடுகெலக்குநகர்
தவறாகநடந்துதடுத்தவனைப்
புவிமேனிரைமீட்பதுபோர்விரகே. உசாரு)

ஆன்மீண்டுபுரத்திலடைந்தபினர்க்
கோன்மீண்டுறுவென்றிகொளற்குரியோ
மேன்மூண்டிவர்மேவில்விலக்குதுமற்
றேன்மூண்டவர்மேலுறலேதமரோ. (உசாசா)

என்றானவனுக்குமெனக்கருதிக்
குன்றாரிரதங்குரவர்க்கொருசார்
துன்றாவலமாய்வருசூட்சியினாற்
சென்றேகவிடுத்தனன்செய்விரைவால். (உசாஎ)

ஆடுங்கொடிசூழிரதத்தமருந்
தேடும்புகழாளிசிலைக்குருவை
நாடுஞ்சரணந்தருநன்மையென
வோடுங்கணைதானிரண்டெய்த்தனனே. (உசாஅ)

காமாரியருட்பெறுகாளைகாணை
வாமாரியனுக்குவலம்புரியா
தீமாரிசெலுத்தறுநந்தவர்போற்
பூமாரிபொழிந்ததுபொன்னடியில். (௨௬௯)

உடனேயிருவான்கணையுய்த்திடவந்
தடனேரிலையாகியவந்தணனொண்
மடனேர்செவிமாட்டின்மடங்கியதா
லிடர்நீங்கியடைந்தியம்புதல்போல். (௨௭0)

அவ்வாறுகுலக்குரவற்குமளித்
திவ்வான்கிருபற்குமியற்றியபின்
செவ்வானகமூடுறுதேரினனிற்
றெவ்வாரணிபோந்துதிரீயினனால். (௨௭௧)

இப்பான்மறையோனிமையோர்புகழுந்
தப்பாவிரதத்துறுசாந்தனொடு
மிப்பான்மைமொழிந்தனனேவுகணைக்
கொப்பாவிடவல்லவருண்டுகொலோ (௨௭௨)

போதிற்புரளுங்கணைபோர்த்தநரன்
கோதற்றடிபோற்றியகொள்கையவாங்
காதிற்சிலவந்துகலிதத்தவன்
றாதிற்சுபமோடுறல்சொல்வதுவே. (௨௭௩)

இணையற்றபெருந்திறலேற்றவனோர்
கணையைத்தடைசெய்குதல்கற்றவரார்
புணைகற்றறிகொட்புறல்போலொருவன்
றுணைபெற்றமர்வேட்டதுகொன்றலரோ. (௨௭௪)

இனியெவ்வணமெய்தியவேந்தல்பெருந்
தனிவார்சிலையின்முனைதன்னிலிவண்
சனிதன்றுணையாருயிர்தப்பலெனு
முனியோதமொழிந்தனன்வீடுமனே (௨௭௫)

வேறு.

கோடுகொண்டசெம்பவளவாயனுண்டுதந்தபுருகூதனுண்டுயர்ந்தபரியாய், மாடுகொண்டவன்கருணைபோதவுண்டெதிர்ந்திவனையாவர்கொல்வயம்புனைகுவோர், நாடுகொண்டதன்றியபிமானமுந்துறந்தடவிநாடொறுமுயங்கல்புரிவோன், கேடுகொண்டனன்சாதமாவதென்னையின்றுகவிகேதனபடர்ந்ததுணிபால். (௨௭௬)

தேரில்வந்தெழுந்தபுயல்வாகன்மைந்தனம்மையெதிர்சேரவந்திலன்விலகியேவாலே, பாரின்முந்துசென்றபடிதேரிலெங்குளன்கொனரபாலனென்றுநெடிவாலே, போரிலின்றுகண்டுணர்துமேதுமென்றிருந்தபினர்போகிதந்தவன்கடிதேபோய்,நீரிலொண்கலம்பெயர்தல்போல்விரைந்துறுஞ்சாபிதேரிலங்கெதிர்ந்தனனரோ. (௨௭௭)

ஆயபெண்ணிறந்தவருமாயுதங்கொடந்திரமுமானொடுந்துடர்ந்துபுகல் ...ண், டேயெனுந்தனஞ்சயனும்வாய்மலர்ந்துமொய்ம்பிணைகளேகிமன்வள ர்ந்துசெலவோர், மாயிரும்பயன்செய்மகிகாதன்மைந்தனங்குணாவாகைவி ந்தைதந்தனளெனத், தூயனும்விரைந்திரதமூர்ந்தனன்வளைந்துநிரைசூழ்ந் தனன்றொடுங்கழலிரோன். (௨௭௮)

காரொலியுயர்ந்தகிரியூடுறவிழுந்தவுருமேறொலிகலந்ததெனவே
தேரொலிபரம்பவிடையேவருநான்றுணிவுதேறலுமருங்குரவனும்
பேரொலிதருஞ்சிலைகொளாரியன்மகன்கிருபன்பேசருமினன்சுதன்முதற்
பாரொலிதரும்பெயர்கொள்வீரர்முகமழுங்கியணியாழ்படமடங்கினர்களால்

ஆயவர்வரும்பரிசுதேறிநரனொண்கணைகளாலுலகொடம்பரமெலாந் [ன்
தேயுவெழவெங்கணைகள்கோடிகள்சொரிந்துசிலைநாணொலிசெயுந்திறலினு
மாயமெனவும்பர்மனம்வாடினர்மயங்கிவருவாகினிகலைந்ததன்மேற்
சேயிதழ்கலந்தொலிசெய்வால்வளைபுயங்கநகர்சீர்கெடவெழுந்ததுடனே.()

நாணொலிநான்றனதுவால்வளைகறங்கொலிபணுகமணிதங்குமிரதம் [லாங்
பூணொலிமருங்கணைகள் சேரொலியுடன்கதுவுபோர்முனையெதிர்ந்திடனெ
காணருமருஞ்சமர்க்கோளரிபுகுந்தவழிகாய்களிறினம்படுவபோற்
சேணகலநின்றவரிலாரெதிர்தகைந்தவர்கள்சேனையிலிருந்திறல்வலோர். ()

தேவரும்வியந்தனர்வலாரியும்புகழ்ந்துவமைதேடினன்சிறந்ததிறலார்
மூவருமகிழ்ந்தனர்காதலந்தியங்கியதுமோதுவெம்பிரசண்டவுலவைக்
காவலன்கொடுங்கனலியாருநெஞ்சயர்ந்தனர்களகாணுமங்கிருந்ததிறலோ
ரேவரும்படும்பரிசுகூறிலென்கனன்றுநரனேவுறுங்கொடுங்கணைகளால். ()

காவலனிருந்தபடையோடவாசன்றனதுகான்முளைபுகன்றமொழியாற்
கோவலர்செறிந்துநிரையூர்வழிதிரும்பவவர்கோல்கொடுசுலம்பமகிழ்வோ
டாவினமடங்கநனிவாலுயர்வுகொண்டவனியாகுலமடைந்துசிதறி
மாவலிகெடும்படிசெய்தோடியதெழுந்ததுகள்வாள்விழிதொறும்புதையவே.

வேறு.

முந்தவன்றொறுமீட்டலுமுற்கவர்பொதுவர்
வெந்தநெய்யெனவார்வமதடங்கினர்மிகவு
மந்தநெய்யினிற்பாற்றுளியுகுத்தென்வார்த்தார்
வந்தமச்சர்கோமகனுடன்வந்தகோவாலர். (௨௮௪)

பாலெடுத்தபொற்குடநிகர்மடியனபருவச்
சூலெடுத்தநல்வயற்றினமழவிடைதொடர்வக்
கோலெடுத்திளங்கோவலர்கூவினர் துரப்ப
வாலெடுத்தனதுள்ளிமீண்டோடினவனமே. (௨௮௫)

கொண்டகோநிரைகோவலர்கொண்டுபின்போத
மண்டுதீயெழுவான்கணைமருங்குறப்போக்கி
பண்டர்நாயகனளித்தவன்முன்பெயர்ந்தடையார்
தண்டந்தீர்வுறநின்றனன்சார்ந்ததான்வனத்தில். (௨௮௬)

முக்கணற்கு நேர் நின்றவனிரைக்கணமுழுதுந
தெக்கணத்திசைசேர்ந்தபின்றேரொடுந்திருகி
யக்கணத்துமுன்பவனியாளரசன்வாளரவின்
மிக்கவொண்கொடித்தேரினைநோக்கினான்விரைந்தே. (உ௮எ)

அனையகாலையில்வேந்தர்வேந்தணிநகர்செல்வான்
முனையின்முந்தினோனிடைபுகுமொய்ம்புடையுரவோன்
கனைகடுங்கணைக்கார்முகத்தோசையான்மயங்கி
நினைவுசிந்தியாங்கொருபுடைநின்றனனோக்கி. (உ௮௮)

கண்டுவெல்வலிக்கிணையிலான்கட்கடைசிவந்து
வண்டொலிந்ததார்மச்சர்கோமகற்கிதுசொன்னான்.
விண்டுநிற்பவன்வேந்தனுங்கவனெதிர்விரைதேர்
கொண்டுபோதியிக்கணந்தெனக்குறித்தனன்குறிப்பால். (உ௮௯)

மானமாமுடிமன்னனைவிலங்கவல்விரைந்து
தேனிமிர்ந்தெழுதொடைபுனைகோடிஞ்சியஞ்செழுந்தே
ரீனமாருதவேகமென்றிகழ்ந்திடவிடுத்தான்
பானல்வாவிசேர்மச்சர்பூபதிதருபாலன். (உ௯0)

அந்தவேலையிற்றுரோணனையாதியரறிந்து
முந்துவேந்தனைத்தொடர்ந்தன்னமுனைவலானென்னச்
சந்தனங்களாங்கிருந்துழிகடாவினர்தக்கோ
ரிந்திரன்சுதனேறுதேர்விரைவிவர்க்குளதோ. (உ௯௧)

வேகம்வற்றியநதியெனவிதநடைப்புரவிப்
பாகவற்றினைத்தலையறமலைந்துபாழ்படுத்தி
மாகவற்றினிற்பொய்த்தசூதாடியவஞ்ச
னாகவற்றியபுன்மொழிநிருபனைநக்கான். (உ௯உ)

உரியதேரினைமீதுகொண்டுத்தரனசெலுத்தக்
கரியமேனியன்செய்யதாமரைத்தடங்கண்ணன்
புரியவாங்கியசிலையொடுமெதிர்ந்தனன்பொற்றேர்க்
கிரிகளாயிரஞ்சூழநிற்பவனைநேர்கிடைப்ப. (உ௯௩)

உருவினால்வடமேருவைக்கொடுமுடியொடித்து
வெருவவென்பெருந்தாதைநின்றுதையைவென்றான்
பரவநின்னையான்வெல்வனென்றவனிபன்பதாகை
யரவைமற்றவன்பதாகையிலனுமன்வந்தடுத்தான். (உ௯௪)

செருச்செயவான்வருசேனைவெண்டிரையையுங்கடப்பான்
பருச்சிலம்பினின்றுதைதருபானுவைப்போல
வுருச்செழுஞ்சுடரெறிப்பநின்றுலாவினனுண்மைக்
கருச்சுனன்றடந்தேர்க்கொடியாடையிலனுமன். (உ௯௫)

பாகும்வாசியுமமைந்ததோர்தேர்மிசைப்பாய்ந்து
மாகுசூழவுந்தப்பியவரிநிறமாப்போ
லேகுகின்றபேரிராசராசனையெதிர்தகைந்து
கோகுதட்டிடுதனஞ்செயனிவையிவைகூறும். (உகசு)

வேறு.

*கார்முகங்கைத்தலத்திருப்பக்கைம்மிகு
போர்முகங்கண்டுநீபுறந்தந்தேகினு
லூர்முகக்களிற்றின்மேலுலாவுவீதியில்
வார்முகக்கனதனமார்தரென்சொல்வார். (உகஎ)

*இருபுறஞ்சாமரையிரட்டத்திங்கள்போ
லொருகுடைநிழற்றவிவ்வுலகம்நின்னதாய்
மருவலர்கைதொழவாழுகின்றநீ
பொருமுனைகாண்டலும்போதல்போதுமோ. (உகஅ)

*உன்பெருந்துணைவரோடுன்னையோர்கணத்
தென்பெருங்கணைகளுக்கிரைகளாக்குவேன்
வன்பெருங்கொடிமிசைமடங்கலேற்றினோன்
றன்பெருவஞ்சினந்தப்புமேகொலாம். (உகக)

*எங்களைக்கானில்விட்டிரவியேகவெண்
டிங்களைப்போனெடுந்திரிகிரியோச்சினீர்
சங்களைப்பயில்வளநாடன்றண்டினு
லுங்களைக்களப்பலியூட்டுநாளையே. (கூ00)

*இரவலரிளையவரேத்துநாவலர்
விரவியதூதுவர்விருத்தர்வேதிய
ரரிவையர்வெஞ்சமரஞ்சுவோர்பெருங்
குரவரென்றிவர்களைக்கோறல்பாவமே. (கூ0க)

*பற்பலவுரையிவன்பகரும்வேலையிற்
சொற்பயினுன்மறைத்துவசன்வீடுமன்
கற்பகநிகர்கொடைக்கன்னனுதியோர்
மற்புயநிருபனைவந்துகூடினர். (கூ0உ)

தம்பியர்சிலர்முடித்தாயவேந்தர்கள்
நம்பியசகுனிநன்னுமவேலுடைத்
தும்பிநேர்விகர்னன்றுச்சாதனன்முதல்
வம்பவிழலங்காரவந்துதாங்கினர். (கூ0கூ)

காரொலியேழ்பெருங்கடலினார்ப்பொலி
பேரொலியுளவெலாம்பெயர்ந்ததென்னவே
தேரொலிகரியொலிசேனைமாவொலி
பேரொலியுறவிருபுறத்துமூடினர். (கூ0ச)

ஆர்த்திருபுறத்தினுமாழியேதெனப்
போர்த்தவாகினிக்கிடைபொருந்துமங்கர்கோன்
வேர்த்தணிதிருநுதல்வெதும்பிச்சீறித்தன்
றேர்த்தனைக்கடவினன்றிசைகளுட்கவே. (௩௦௫)

*மின்னுடன்மின்மினிவெகுளுமாறுபோற்
றன்னுடனிகரிலாத்தடக்கைவண்மையான்
மன்னுடனிகழ்வதுவார்த்தையன்றுநீ
யென்னுடன்மலேதிவந்தென்றுகூறினன். (௩௦௬)

*காக்கமும்மதம்பொழிகாய்களிற்றைவிட்
டெரக்கொடுவெரியின்மேலோடுமியாளிபோ
னிரக்குமன்னிருபனும்நிற்கவந்தபோ
ரிரக்குமக்கன்னன்மேலிரதமேவினன். (௩௦௭)

இருவருமெதிரெதிரேற்குங்காலையிற்
பரிதிதன்மகன்றுணைப்படைஞர்சீறியே
பெருமைசேர்மடங்கன்மேற்பெற்றமெண்ணற
வருவபோலெதிர்ந்தனர்நரனைமாண்புளோர். (௩௦௮)

சித்திராங்கதனொடுவிகர்னன்றெவ்வடு
சித்திரசேனன்சங்கிராமசித்துவே
சித்திரவீரத்துன்முகனெண்டுர்ச்சயன்
சித்திரநெடுஞ்சிலேகோலிச்சேர்ந்தபின். (௩௦௯)

பாய்வடிக்கணைகளைப்பரப்பிவானெலாங்
காய்கனற்பொலிதரக்கனன்றுநிற்றலாற்
சேய்நிகர்த்தெதிர்த்தவத்தேவர்கோமகன்
மாய்விவர்க்கிவனெனமனத்திற்றுங்கியே. (௩௧௦)

நிறங்கிளர்பெருஞ்சிலைவளைத்துநீண்மதித்
திறந்தருபிறைக்கணைசெலுத்துமுன்னரே
பிறங்குநாணொலியுடைப்பெருக்கங்காட்டலு
மறந்தவிர்ந்தஞ்சிமெய்ம்மயங்கினாரோ. (௩௧௧)

மீட்டுமெங்கவர்தெளிவெயதிவெஞ்சின
மூட்டுதீயெனவிழிசேப்பமுன்புருந்
தீட்டுவான்கணைமழைசொரியவேந்தறன்
மாட்டினுமகொடுங்கணைமழையெழுந்ததே. (௩௧௨)

சித்திராங்கதனொருசிலையுந்தெருமோ
ரத்திரமுனையினாலழிந்துமற்றவன்
கொத்தவிழ்சென்னியுங்குறைத்துப்போக்கினன்
கைத்திறற்கொருவனுங்கவுந்திகாளையே. (௩௧௩)

விரகுடைவிகர்ணனைவென்றுநீக்கியே
பரவுருசித்திரசேனன்பாரின்மே
லரவுருமாற்குலைந்தயர்தன்மானவே
சரவொலியாற்றரைசாய்த்துமீளவும். (௬௧௪)

கிளர்சினந்தணிவில்சங்கிராமசித்துவை
வளருடற்பிளந்துதுன்முகனைமாய்ததோரி இ
யளவருதுர்ச்சயன்சென்னியந்தரத்
திளவெயிலுமிழ்தாந்துணிசெய்தேத்தினன். (௬௧௫)

மூடியவாகினிபரிதிமுன்னரி
னீடியபனியெனநீங்கியேங்கியே
யோடியகாலையிலுருந்துக்கன்னனுஞ்
சூடியவாகையன்றேரிற்றோன்றினன். (௬௧௬)

*இரதமுமிரதமுமெதிர்ந்தபோதிரு
குரதுரகங்களுங்கூவியார்த்தன
வுரைதருபாகருமுடன்றுகூவினர்
விரைதனுவளைத்தனர்வீரர்தாமுமே. (௬௧௭)

வேறு.

அரியதமனியவரைகளெனவொளிருமிருமகிபாணசிலைகடருகணைகளா
லுரியகடநிலைதவறியுலகுமொளிமறையவிரவுகமுடிவிலுறவெருவினர்
கரிகடிசைதொறுமுதவுகடகாடமறவரைகள்கநரெருலிகள்பெருகியதரோ
தெரியனறைகமழ்சுராருமுலகிறைவர்பலருமதிசெயமிதினிலுளகொலெனவே

படகவொலியொடுமிரவிசுதனுதவுவிடமனையபகழிமழைவருவனவெலாந்
தடமருடமொளிர்விசையனடுபகழிசொரிபொறிகடனிலரியபொடிவிரவின
மிடலுடையகடகரியின்மிசைபெயருமரிகுமரன்விடுபகழிமழையினியசெஞ்
சுடருதவுமொருமகவினரியசிலைபடுகொடியசுடுகணைகள்பொடிசெய்தனவால்.

இருவரிவரிகன்மலையவிரவிதருசுதனொருபதெரிகணைகள்வலவன்மிசை
யும், பொருகணைகளொருபதுடனிருபதவனிரதமிசைபுரவிகளின்மிசையிரு
பதும், பெருவலியனுயர்விசயன்மிசைகணைகள்சதமுநெடிபெயருமுனரு
தவவவனங், கொருகணையில்வருகணைகள்பலவுமடுவனகருதியுறுமமார்பாவி
னர்களால். (௬௨௦)

நானிரவிமகனிரதமிசைபுரவிமிசைவலவனணிசெய்புயமிசைசெலவிடுஞ், ச
ரமழைகளிவனுமணுவினிலரிய பொடிபடல்செய்தகமைவலிசிலர் பரவினர்,
விரவுமவர்விழியுதவுகன லு முருள்களினுதவு மி குகன லுமவர்கணைகள் வாய்
சொரிகனலுமினியதெனவவர்வெகுளியுரையி லெழுசுடர்செய்கனல்முடுகிய
தரோ. (௬௨௧)

அதுதெரியுமமார்பதிமகனுமிவனமர்செய்வலியதையுணாமூதுசினமெ
ழுந்,
னுனைநிறுவினேன், கதுவுமினியொருகணையிலுலகறியவயமடைதல்கருதியு
ணர்கெனமுறைபகர்ந், ததிவிசைவிலிருகணைகள்புகவுதவியிரவிசுதனரியசி
துணிசெய்தனனே. (கூ௨௨)

பகருமொருகிரிபிளவுபடுதலெனவொளிசெய்சிலைபடபடென்முரியவட
லே, புகலுனைதயனருள்சுதனுநகைபிறழவிருவிழிகள்பொழிபொறிகள்முகி
ல்கொளுவவே, தகர்சிலையையுகவிசிறிவலிநிகரிலரியசமர்தருமெதிரிமிசை
கனல்செய்வேற்,செகமதிரவெறிதாலுமுழுமதியின்மிசையாவுசெறிசெயலி
னணுகியதரோ. (கூ௨௩)

அரவெழுதுமுயர்துவசனுடனாசர்பலர்விசயனடறெரிதுமினியிவ
ணெனா, விரவுநிமைதருகிலர்கள்தமையுமுணர்கிலர்தமதுவிழிமலர்கள்பொ
துளியதரோ, பாவுகவியெழுதுகொடியிரதன்வரிசிலையிலெழுபகழிமுனைக
ளினுறுசெவ்வேற், சாருமகிழ்பெறவணுவிலரியபொடிசெயவுலவைதுகளை
யிவர்புடையுதவலால். (கூ௨௪)

தனதெஃகமழிதாலுமுதவுகொடைவிரதனுயர்தனுவுமறுதலைநிறுவியே
மனதின்மிகவயிரமெழவெதிரணுகியளவில்சமர்மலையவரிதருகுமானும், புனி
தவிரணியவொளிசெய்சகடிரதம்வயவலவர்புரவிபலபொடியுறல்செய்தே, யி
னதனையனுடவிலணி கவசமுறுமவிதுகள்செய்திவைசிலசொனானுரைசெய்
தான். (கூ௨௫)

நிறையறிவிலாசவையிலமரிலெலைநிகர்வலிகொணிருபரிலையெனவுரை
செய்வாய், குறைவில்வலியுடையவரிலமர்பொருவைவெரினுநவுகொடையு
முனதிடையுளதுகா, ணிறைமகிழநெறிதவறுமொழிகுளறியவனிதவிவினி
யநலனுறலழகலாற், பிறைமுனைசெயடுபகழிதருசமரிலிகன்மலைநல்பிழை
யறவுமழவிடையனுய். (கூ௨௬)

தருமநெறிதவறுமெனமுரசெழுதுதுவசன்மொழிகரவாவுதடைபடுத
ல்போற், கருமமுளமகுடமுடியாசவையினழறனையைகவலைபடுமிடைபொ
றைசெய்தேன், பெருமன்விழிமலரனையபொழுதுசிறிநகையினுயர்பெயர்
புகலவுயிர்பெறுவையோ, வெருவியரியடிபாவுமடவாலைநகைசெய்தறவெகு
ளுமிசைகெடுசுமடனே. (கூ௨௭)

பருகுபுனலொழியநிருபனையமரிவிளைஞரொடுபவனன்மகனடுவெனன
வே, கருதியுரைசெயுமளவினுனதுயிரையெனதுகணைகளிலடுவெனனவுரை
செய்தேன், செருமலைதனுணர்வையெனிலமர்பொருதுனுயிர்விடுதிசிறிதுய
கனுறநினைவதே, லொருகணையினுனதுசிரமிருபிளவுபடுமுனுனதுடல்கொ
டதல்கெனவுரைசெய்தான். (கூ௨௮)

வேறு.

பாதித்தலங்கொளுமையோடுமெந்தைவிடைமீதுவந்துபடாச்
சாதித்தயோகிமொழிவந்திரண்டுசெவியூடுசாருமளவி
லாதித்தன்மைந்தனிருகண்கள்போலவனல்காலுயிர்ப்புமலியச்
சோதித்தடங்கையொலிசெய்துசாலநகைசெய்தகன்றுதுணிபால். (௯௨௯)

வரையொத்தசேமவிரதத்திலேறிமணிமிக்கவேமகவசங்
கரையற்றகன்றமலர்மார்பினூடுகவினத்தரித்துநெடுநாண்
டிரையொத்திலங்குசிலையைத்தடங்கைசெறிவித்தடைந்துசெருவாய்
விரையப்புகுந்துநரனைத்தகைந்துவிறலிற்கொடுஞ்சொன்மொழிவான். ()

பல்லோருமுன்னைநகைசெய்யநாடுபகைஞர்க்களித்துனுயிர்கொண்
டல்லாரவத்தினிடைநாளகற்றவறிவாயலாதுசமர்வாய்
வில்லாளரோடுமெதிர்நின்றுபோரில்விறலெய்துவீரதருமம்
வல்லாய்கொனீயுமறிவாரில்வந்தமகவானளித்தமதலாய். (௯௩௧)

தன்னாடுகொண்டுமனைமாதையீர்த்தசமயத்திலாதமறமிங்
கென்னாலடைந்ததுளவேனுநீகொலெனைவென்றுவாகைபுனைவாய்
மன்னாலுயிர்ப்பினமகனீயெனம்பில்வசையோடுமாவிகழலப்
பொன்னாடுமேவுநாள்வந்ததென்கொல்புகலுங்கொடுஞ்சொலினிமேல். ()

வெல்லும்புயத்தின்வலியன்றெளித்துவிறல்கெட்டதெந்தன்மிசையாஞ்
சொல்லுங்கணத்திலினியேனும்வென்றுதுணிபாகவாகைபுனைவாய்
வில்லுஞ்செலுத்திரதமுங்கலைத்தவிரகாலுரைத்தபடியோ
கொல்லுங்கயத்தையரிகண்டிடைந்துகுறுகிற்பிளத்தலுணர்வாய். (௯௩௩)

சொல்வண்மையென்னைபயனென்றுரைத்ததொனியோடதட்டிவெகுளா
வில்வண்மைகாட்டியிரவிக்குதித்தவிறன்மீளிசாலவிசையாற்
பலவன்மைவாளிபொழியச்சிறந்தபலதேயவேந்தர்முனைபுக்
கல்வண்மைகாட்டுமழல்வாளிகோடியரிமைந்தன்மீதுதையினர். (௯௩௪)

நனிபட்டசேனையுடனெண்ணிலாதநரபாலர்வந்துகதுவத்
தனிபட்டசீயமெனநின்றகாளைதனுவிற்சொரிந்தகணையாற்
றெனிபட்டவாழியிடைவந்தெழுந்தசுடர்முன்னர்வந்துநிமிரும்
பனிபட்டசெய்கைபட்டார்களன்றியெவர்புண்படாதுபடர்வோர் (௯௩௫)

வருசேனைசிந்தியிரியத்திகழ்ந்தமார்த்தாண்டன்மைந்தனெதிராக்
குருசேனைமன்னர்பலரன்புகூரவழல்வாளிகோடிகொளுவி
யொருசேனைசையமிசைகாலெறித்ததுவமானமென்னவுதவப்
பொருசெய்தனுதுகணையிற்பிளந்துபொய்யென்னநின்றபொழுதில். ()

வேறு.

கொடையாலேபெயர்விளக்குங்கொற்றவனுமூவுலகுங்குறிக்கும்வெற்றிப்
படையாலேபெயர்விளக்கும்பாண்டவனைமீண்டுமமர்பயிற்றும்போதிற்
றடையாயிங்கிவனுடன்போர்தரிப்பதுளம்விருப்புறுவோர்சுசாத்திறலே
புடையாருமணிக்கவசம்பொடியுறச்செய்தாமுழுதும்புண்செய்தானே. ().

மீளவிருகணையாலேகச்சைநெடுங்கொடிதுணித்துவிருதுபேசுங், காளவனற்கட்கடையான்கதிர்முடியுமதாணிகளுங்கணையானீக்கி, வாளமரிற்றலைப்பட்டோர்குலைந்தோடநெடுஞ்சிலையுந்துணித்துமாற்றி, மூளுமழற்கடுஞ்சினத்தான்மொய்ம்பிணைகள்கடுஞ்சரத்தான்மூழ்கச்செய்தான். ()

தனதுசிலைமுரிந்தகலக்கன்னன்மணியிழந்தரவுதளர்வதேபோன்
மனதுதளர்ந்தக்கணத்தோர்வரிசிலைகொண்டிகலிரவிமதியுமுட்கப்
புனிதமுறுகடவுளரும்பெரிதுவப்பச்சிறுபொழுதுபுரிந்தபின்ன
ரினிதனும்பங்குனன்சரத்தாலெடுத்தசிலைகணத்திடைவிற்றதாலோ (௩௩௯)

வட்டவரிச்சிலைமுரியவெழுந்தார்த்தோர்குவடனையவழுவிறண்ட
மட்டதிசைகளுந்துளங்கவரிமகனங்கரிமகன்மேலடர்த்துவீசத்
தொட்டகணையொன்றாலேயோனந்தந்துணியாகிச்சூழ்ந்தசேனை
பட்டிரியத்திசைதோறும்பாய்ந்ததல்லாற்றேரவன்மேற்பட்டதின்றே. ()

முரிந்துகதைபொடிபடலுமுயிர்ப்போங்கவிருந்தவனைமுறுவல்வாய்ப்பத்
தெரிந்தகணைநாலிரண்டுசெலுத்தியவன்பொறுத்திருந்ததேருமாவும்
பரிந்தவிறற்சாரதியுமபடநூறித்தெழித்தளவிற்பாரிற்பாய்ந்து
கரிந்துமுகமெல்லழியக்கைவேல்கொண்டமர்புரிந்தான்கன்னனென்போன்.

கரமொளிர்செங்கதிர்மைந்தனெதிரெய்தவொருநொடியிற்கணைகள்போக்கி
வரமொளிருந்தனஞ்சயனுமத்தோனுமத்தோன்றன்மார்புந்தோளுந்
சிரமொளிருஞ்செழுஞ்சோரிசொரியமயிர்க்காறோறுஞ்செறிப்பமாழ்கிச்
சரமொளிருங்குலவரைபோற்றாணித்தேர்மீதிருந்தான்சலித்துமன்றோ. ()

ஈடுபடுமதயானையெனநின்றகன்னனைக்கண்டிதங்காளாகித்
தோடுபடுநறுந்தெரியற்சுரராசன்மகனழன்றுசொரியும்வாளி
காடுபடுசெந்தழலிற்கன்னனானுதல்குளிப்பக்கருதானாகிப்
பீடுபடுமாற்றலகன்றோடினானுத்தரன்கைபெயர்த்துநக்கான். (௩௪௩)

அஞ்ஞானவிரகுணருமாசுமவன்றனக்குறுதியறைவோராரு
மெஞ்ஞான்றுமாசுநமக்கெய்தாகொல்லெனத்தளரவிரவிநேரும்
விஞ்ஞானவாசிரியன்விடுமனுதியர்புயங்கள்விண்மீதோங்கச்
செஞ்ஞாயிறளித்தபிரான்றிறலழிந்துபுறந்தந்தான்செருவினம்மா. (௩௪௪)

ஏமத்தேர்வல்லவரிலெனக்கிணையானவரிலையென்றெடுத்துக்கூறுந்
தாமத்தேர்தனிக்குரிசிற்பூமித்தேர்மிசைவிரைந்ததன்மைகாணா
வாமத்தேர்மிசையிவுளித்தாமப்போர்புனைந்திருந்தமதுகைமைந்தன்
சேமத்தேரொடுவிரைந்துகன்னனைப்போய்க்குறுகியிவைதெரிப்பதானான்.

வந்ததொருதேரென்றும்வரிசிலையோன்றமியென்றும்வலிகள்பேசி
முந்தியனாற்படையுடன்போயடலமரிற்றலைப்பட்டுமுனைந்தாயன்றே
வுந்தனதுசிலையெங்கேமுடியெங்கேவாவுறுகொய்யுளைத்தேரெங்கே
தந்திரவாகினியெங்கேயுனதுபெருமிதமெங்கேசாற்றுவாயால். (௩௪௬)

